# செந்தமிழ்

தொகுதி 83 செப்டம்பர் 89 பகுதி 3




**மதுரைத் தமிழ்ச்சங்கம், மதுரை - 1**

பொறுப்பாசிரியர் : பேராசிரியர் டாக்டர்.
நா. பாலுசாமி, எம் ஏ, பி எல்., எம்.லிட்., பிஎச்.டி.

## பொருளடக்கம்



# மாறன் பாப்பாவினத்தின் ஆசிரியர்

டாக்டர்
எஸ். கிருஷ்ணமூர்த்தி

மாறன் என்ற தலைப்பில் மூன்று நூல்கள் உள்ளன. அவை மாறனகப்பொருள், மாறனலங்காரம்,மாறன் பாப்பாவினம் என்பன வாம். இவற்றுள் முதலிரு நூல்களும் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்பவரால் இயற்றப் பெற்றவை என்பது அவற்றின் பாயிரங்கள் மூலம் தெரிகிறது. இவ்வாசிரியரால் எழுதப்பெற்ற பிறநூல்கள் திருக்குருகை மான்மியமும் நம்பெருமாள் மும்மணிக் கோவையும் திருப்பதிக் கோவையுமாகும். இவற்றுள் திருப்பதிக் கோவைச் செய்யுட்கள் மாறனகப் பொருளுக்கு மேற்கோளாக இயற்றப்பட்டவை.

## திருக்குருகைப் பெருமாள் கவிராயர்

இவர் நம்மாழ்வார் பிறந்த ஊராகிய திருக்குருகையில் இருந்தமையால் இவர் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்றழைக்கப் பெற்றார். இவர் நம்மாழ்வாரின் மீது ஆறாக்காதல் கொண்டவர். இவர் தந்தையார் பெயரும் இஃதேயாம். இவரது இயற்பெயர் சடையன் என்பதை மாறனலங்காரப் பாயிரச் செய்யுளால் அறியலாம். திருமாலைப் பரம்பொருளாகக் கருதி வாழ்ந்த இவர் பண்டைய இலக்கிய இலக்கணங்களில் ஆழ்ந்த, தெளிந்த புலமை கொண்டவர் என்பதை இவர்தம் படைப்புகளால் அறிய லாம். அகப்பொருள், அணியிலக்கணம், கோவை, மான்மியம் போன்றவற்றை இவர் செய்துள்ளதால் இவர் சிறந்த இலக்கண இலக்கியப் படைப்பாளர். இவர்தம் ஞானாசிரியராக சீநிவாச சீயர் என்பவர் இருந்தார். இவர்தம் மாணவர் காரிரத்தினக் கவிராயர் என்பவராவார். இவரே மாறனலங்காரத்திற்கு உரை யும் கண்டுள்ளார்.

பாப்பாவினத்தின் ஆசிரியர்

மாறன் என்ற பெயரில் வாழ்ந்த மூவருள் மாறன்பாப்பா வினத்தின் ஆசிரியர் யார் என்பதில் கருத்து வேறுபாடுகள் காணப் படுகின்றன. 'இதனை இயற்றினார் முதலிய விவரமொன்றும் தெரியவில்லை' என இந்நூலின் முகவுரையில் கி. இராமாநுசய் யங்கார் குறிப்பிட்டுள்ளார். ஆனால் மாறனலங்கார வரலாற்றில் ஆ.மா. சடகோபராமாநுசாச்சாரியர் இந்நூலை இயற்றியவர் காரி ரத்தினக் கவிராயர் என்று குறித்துள்ளார். அக்கருதுகோளுக்கு அவர் எவ்விதக் காரணங்களும் கூறவில்லை. கி. இராமாநுசய் யங்காரே பாப்பாவின முன்னுரையில் முன்னவரின் கருத்தை மறுத்து,

> ''இந்நூற் செய்யுட்களின் நடை முதலியவை மாறனலங்கார உதாரணச் செய்யுட்களின் நடை முதலியனவற்றை யொத்தனவாயிருத்தலாலும், மாறனலங்காரத்துள் உதா-ரணமாக எடுத்தாளப் பட்டனவும் திருக்குருகைப் பெரு-மாள் கவிராயர் இயற்றியனவுமான குரு காமான்மியச் செய்-யுட்களிற் சிலவும், நம்பெருமாள் மும்மணிக் கோவைச் செய்யுட்களும், வேறுபல செய்யுட்களும் இந்நூலகத்துக் காணப்படுதலாலும் இது மாறனலங்கார ஆசிரியராகிய திருக்குருகைப் பெருமாள் கவிராயரால் தொகுத்தியற்றப் பட்டிருக்கலாமென்று தோன்றுகிறது'' (பாப்பாவினம், முகவுரை)

என்பார். இந்நூலின் ஆசிரியர் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் எனவும், குறிப்புரை எழுதியவர் பேரைகாரி இரத்தினக் கவிராயர் எனவும் கூறப்படுகிறது.

பாப்பாவினம் - நூலியல்பு

இந்நூல் ஒரு தொகுப்பு நூலாகும். யாப்பிலக்கணத்திற்கு ஏற்ப அமைந்த செய்யுட்களைத் தொகுத்து இல்லாதவற்றைப் புதியனவாக யாத்து அமைக்கப்பட்ட நூலாக இது விளங்குகிறது. நூலும் குறிப்புரையுமாக இது அமைந்துள்ளது. இதனுள் வெண்பா, வெண்பாவினம், ஆசிரியப்பா, ஆசிரியப்பாவினம், கலிப்பா, கலிப்பாவினம், வஞ்சிப்பா, வஞ்சிப்பாவினம், மருட்பா என அமைந்த யாப்பிலக்கணக் கணங்களுக்குச் செய்யுட்கள் 135

தரப்பட்டுள்ளன. பிற்சேர்க்கையாக 5 பரிபாடல்கள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. இச் செய்யுட்கள் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் இயற்றிய திருக்குருகை மான்மியச் செய்யுட்கள் இரண்டும் (83, 84), நம்பெருமாள் மும்மணிக் கோவைச் செய்யுட்கள் ஐந்தும் (7,44,45,46,50) எடுத்தாளப் பட்டுள்ளன. மேலும், மாறனலங்காரத்துள் எடுத்தாளப் பட்ட செய்யுட்களுள் 45 (1-5, 7-9, 12, 17, 19, 20, 23-28, 42-51, 58, 64, 66, 69, 72, 84, 85, 92, 94, 98, 102, 105, 124, 126, 129, 130, 135) இந்நூலுள்ளும் ஆளப்பட்டுள்ளன. இவற்றால் பெரும்பாலான செய்யுட்கள் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் இயற்றியவை என்பது தெளிவாகின்றது.

தொகுப்பு நூல் - மரபு

இலக்கணத்திற்கு ஏற்ப இலக்கியத்தைப் படைத்து, அதனை ஒரு சான்று நூலாகத் தருதல் மரபாக அமைந்திருக்கின்றது. குமரகுருபர சுவாமிகள் யாப்பிலக்கணத்திற்கு ஓர் இலக்கியமாகச் சிதம்பரச் செய்யுட்கோவையைப் பாடியருளினார். இவற்றிலுள்ள செய்யுட்கள் தொகுக்கப் பெற்றவையல்ல; இவரால் புதியனவாக இறைவன் புகழ்பாடுவதாக எழுதப்பட்டவை. சான்றிலக்கியமாயினும் அதனை ஒரு புதிய இலக்கியமாகவே படைத்தருளினார். இவரைப் போன்றே பாம்பன் சுவாமிகள் பாடிய திருவலங்கற்றிரட்டில் அமைந்த பல்சந்தப் பரிமளமும் இவ்வமைப்பைக் கொண்ட புதிய சான்றிலக்கியமாகும் இதுவும் தொகுப்பு நூலன்று.

மூலநூலாசிரியர் தொகுப்பு நூல்செய்யும் மரபு பெரும்பாலும் இல்லையென்றே கூறலாம். மூலஆசிரியரின் பின்வந்தோர், அவர்தம் மாணவர் போன்றோரே தொகுப்பு நூல்செய்யும் இயல்பைப் பெறுவர். யாப்பிலக்கணத்திற்கு ஏற்ப இலக்கியம் படைக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டிருந்தால் திருக்குருகைப் பெருமாள் கவிராயரே புதிய செய்யுட்களை யாத்து நூலை உருவாயிருக்க முடியும். தாம் எழுதிய இலக்கிய இலக்கணங்களினின்றும் செய்யுட்களைத் தொகுத்து நூலாக்கும் தொகுப்பு வேலையைஅவர்செய்ய வேண்டியதில்லை. மூலநூலாசிரியரே இத்தொகுப்பு வேலையைச் செய்தார் என்று கூறுவது அவருக்குச் சிறப்பாகாது. எனவே பாப்பாவினத்தைச் செய்தவர் இவரல்லர் என்று கூறலாம். பின்வரும் காரணங்களும் இதற்குச் சான்றுகளாக அமையலாம்.

குறிப்பாசிரியர்

பாப்பாவினத்தின் குறிப்பாசிரியர் காரிஇரத்தினக் கவிராயர் என்பதில் எவரும் மாறுபடவில்லை. இந்நூலுக்கு அமைந்துள்ள குறிப்புரை சிறந்த உரையாகும். செய்யுட்களின் யாப்பிலக்கணம் கூறப்பெறுவதோடு, அவற்றின் திணை, துறை குறிப்புகளும் அணி பற்றிய குறிப்புகளும் சுட்டப் பெற்றுள்ளன. சான்றாக, 'இது நாற்பத்தைந்தடியால் இடையிடை தனிச்சொற் பெற்றுவந்த நேரிசையாசிரியப்பா (52) என்றும், 'திணை-பெண்பாற் கூற்றுக் கைக்கிளை, துறை-கையறல் (33) என்றும், 'அலங்காரம்-அவயவி யுருவகம்' (80) என்றும் சுட்டப்பெறுவதைக் காணலாம். காரி ரத்தினக் கவிராயர் திருக்குருகைப்பெருமாள் கவிராயரின் மாணவர் என்பதும் மாறனலங்காரத்திற்கு உரையாசிரியர் என்பதும் இங்கு நினைவிற் கொள்ளத்தக்கதாகும். மாறனகப் பொருளில் புலமை கொண்டதனாலும், மாறனலங்காரத்திற்கு உரையெழுதியதனா லும், பாப்பாவினத்திற்கு அத்தகு அமைப்பு முறையை இவர்மேற் கொண்டுள்ளார் என்று கொள்வது ,பொருத்தமுடையதாகும்.

எவ்வகைப்பட்ட உரையாசிரியரானாலும் உரையை இரு நெறிகளில் அமைக்கக் கூடும். ஒன்று தன்மை நெறி; மற்றொன்று படர்க்கை நெறி. தன்மைநெறி புலப்படாமலே உரை எழுது-கின்ற பாங்கும் உண்டு. பெரும்பாலும் தன்மைநெறியில் இரு உண்மைகள் புலனாகக் கூடும். ஒன்று, நூலையும் உரையையும் ஒருவரே எழுதினால் இந்நெறி வெளிப்படும்; இரண்டு, உரை-யாசிரியரின் பன்முகச் சிறப்பு வெளிப்படும். இரண்டாம் வகை-யில் அடங்குபவர்களே பண்டைய உரையாசிரியர்கள். படர்க்கை நெறி என்பது நூலாசிரியரும் உரையாசிரியரும் வேறானவர் என்பதை வெளிப்படுத்தி நிற்கும்.

இவ்வகையில் பாப்பாவினத்திற்கு அமைந்த குறிப்புரையில் சில கருத்துகள் வெளிப்படுகின்றன. ஆசிரியப்பாவின் முடிவில், ''இதன்பின் இனி, கோயிற்கலம்பகத்துள், 'கரைபொரு தொழு-கும் காவிரியாறே' என்னும் அகவல் போல இடையிடை தனிச் சொற்பெற்று முதலே அடி ஐந்து அந்தாதிப்பாவாக ஒரகவல் பாட வேணும் இரண்டாவது இவ்விரண்டடியாய் ஏழும் எட்டுத் தானமாகி 9ஆம் தானம் ஆறடியாய் நேரிசையாசிரியப்பாவாய்ப்

பாட வேணும் ஆசிரியப்பா முற்றும்'' (75) என்று சுவடிகளில் காணப்படுவதாக நூலின் பதிப்பாசிரியர் குறிப்பிட்டுள்ளார். குறிப் பாசிரியரே இவ்வாறு குறிப்பிட்டுள்ளது, செய்யுளை எழுதிய தொகுத்த செயலை அவரே மேற்கொண்டிருப்பார் என்பதைப் புலப்படுத்துகின்றது.

கொச்சக ஒரு போகைக் கூறவந்தவர் 'இக் கருத்தறியார் இதனை வெண்கலியென்ப; வெண்கலியாமாறு முன்னர்க் காட்டு தும்' (101) என்று கூறுவதைக் காணலாம். முன்னர்க் காட்டுதும்' என்று தன்மையில் கூறுவதும், அதனைக் காட்டவிருப்பவர் அவரே யாவதும் குறித்தற்குரியன. பிறிதோரிடத்தில், ''இவ்-வாறு வரும் கொச்சகங்களையொரு வரையறைப்படுத்து நான்கு பாவிலும் இனஞ்சேர்த்துப் பண்ணிற்குத் திறம் போலத் தாழிசை துறை விருத்தமெனப் பன்னிரு பகுதியாகக் கூறுவர். அவற்றுள் வெண்பாவிற்கும் ஆசிரியத்திற்கும் இனம் முன்னர்க் கூறினாம். ஒழிந்த இக் கவி முதலிய பாவிரண்டிற்கும் இனம் பின்னர்க் காட்-டுவதும்'' (101) என்றும் கூறுவர். 'யான் கூறினேன்' எனும் பொருள்படும் படியும் 'பிறகு காட்டுவேன்' என்னும் பொருள் படும்படியும் கூறியுள்ளதால் குறிப்புரை எழுதியதோடு இந் நூலைத் தொகுத்தவரும் இவரே யாகலாம் என்று கருதற்கிட முண்டு.

**காரி இரத்தினக் கவிராயர்**

திருக்குருகைப் பெருமாள் கவிராயரின் மாணவராக விளங்-கிய இவர் சிறந்த புலமையாளர் என்பது இவர்தம் உரைகளால் அறியலாகும். யாப்பிலக் கணத்தை எடுத்துக்காட்டி யாப்பு-வகையை நிறுவிக் காட்டுவது இவரிடம் சிறந்து காணப்படுகின்-றது. தொல்காப்பியம், யாப்பருங்கலவிருத்தி, யாப்பருங்கலக் காரிகை போன்றவற்றினின்றும் 22 நூற்பாக்களை மேற்கோளாக ஆண்டுள்ளார். தம் ஆசிரியரைப் போலவே இவரும் ஆழ்வார் மீது ஆறாக் காதல் கொண்டவர். 'காரிரத்நம்' என்பது ஆழ்-வார் திருநாமமாகும். காரிராசன் பெற்ற இரத்தினம் போன்ற புதல்வன் என்பது இதன் பொருள்.

மேலும் இவரே ஒரு தொகுப்பு நூலாசிரியர் என்பதையும் அறியமுடிகின்றது. தொல்காப்பிய நுண் பொருள் மாலை, பரி மேலழகருரை நுண்பொருள் மாலை ஆகிய நூல்களை இவர்

எழுதினார் என்பர். இவ்விரு நூல்களும் தொகுப்பு நூல் வகையைச் சேர்ந்தவையே. இவ்வகையில்தான் பாப்பாவினத்தையும் இவர் தொகுத்திருக்க வேண்டும். சைவத்திற்குச் சிதம்பரச் செய்யுட் கோவை போல வைணவத்திற்கு இந்நூல் எழுதப்பட்டிருக்கலாம். திருமால், நம்மாழ்வார் புகழ்பாடும் பாடல்களை தம் ஆசிரியர் நூல்களினின்றும் தொகுத்தும் பிறவற்றைச் சேர்த்தும் இதற்குப் 'பாப்பாவினம்' எனப்பெயரிட்டு இந்நூலை இவர் தந்திருக்கலாம் என்று கொள்வதே பொருத்தமுடையதாகும். சுவடிகளிலும் இந்நூல் 'பாப்பாவினம்' என்று மட்டுமே குறிக்கப் பெற்றுள்ளது என்பர்.

பரிபாடல்-பிற்சேர்க்கை

பாப்பாவினத்தின் இறுதியில் அமைந்துள்ள 5 பரிபாடல்கள் தனித்த நிலையில் காணப்படுகின்றன. நூற் பதிப்பாசிரியரும் இதுபற்றிய ஐயத்தை எழுப்பியுள்ளார். தொல்காப்பிய இலக்கணத்திற்குப் பின் வேறெந்த நூலும் பரிபாடலுக்கு இலக்கணம் கூறவில்லை என்பது வெளிப்படை. அவ்வாறிருக்கப் பாப்பாவினம் மட்டும் இலக்கணம் கூறியுள்ளது ஐயத்திற்குரியதாகவுள்ளது. அதனோடு மட்டுமன்றி இப்பரிபாடல்களை இந்நூலாசிரியரும் குறிப்புரையாசிரியருமாகிய காரி இரத்தினக் கவிராயரே இயற்றியிருப்பாரா என்பதும் சிந்தனைக்குரியதாகவும் உள்ளது. இப்பாடல்களனைத்தும் 'போலச் செய்த'லாகவே அமைந்துள்ளன. இப்பாடல்களுக்கு அமைந்த குறிப்புரையும் முற்பகுதிக்கு உள்ளது போல் இருக்கவில்லை. மேலும் இக்குறிப்புரை படர்க்கைநெறியில் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும் ''அற்றேல் தொல்காப்பியனார்.. கூறவும்....இப்பரிபாடலகத்து....கூறியதென்னையெனின் ... அகத்தியனார் நோக்கத்தோடும் ஐந்துறுப்பு ஆக்கினாரெனவுணர்க'' (பரி. 1) என்று ஒரு பகுதி காணப்படுகின்றது. பிறிதோரிடத்தில்,

> ''காமங்கண்ணிய நிலைமைத்தாகும் எனவே, அறத்தினும் பொருளினும் வாராதெனக் கூறிய பரிபாடலை இச்செய்யுளுடையார் வாழ்த்தியலாகக் கூறியதென்னையோவெனின் 'வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே' எனச் சிறப்பு விதி ஓதினமையால் நான்கு பாவினுள்ளும் பரிபாடல்

> வெண்பாயாப்பிற்றாதலால் கடவுள் வாழ்த்தாகியும் வரப் பெறுமென்னும் முதனூலாசிரியர் நோக்கம் பற்றிச் சங்கத்தார் பரிபாடல் கூறியவகையாற் கூறினாரென உணர்க''
>
> (பரி. 1)

எனவும் ஒரு பகுதி அமைந்துள்ளது. இப்படர்க்கை நெறியை நோக்கும் பொழுது பரிபாடலைப் பொறுத்தவரை நூலாசிரியரும் குறிப்புரையாசிரியரும் வேறானவர்கள் என்பதை அறியலாம். பாவிலக்கணத்திற்குரிய செய்யுட்களைத் தொகுத்துக் கூற வந்த ஆசிரியர் ஒரு நூலில் இருவேறு நிலைகளைப் பின்பற்றுவ தென்பது முரணானதாகும். மேலும் பரிபாடல், 'நூல் முற்றும்' என்று குறிப்பிட்ட பின் அமைந்திருப்பதும் நோக்கத்தக்கதாகும். எனவே, இது பின்னால் வேறொருவரால் எழுதிச் சேர்க்கப்பட்ட தாகும் என்று கருத இடமுண்டு

எனவே, மூலநூலாசிரியர் தொகுப்புநூல் செய்யும் மரபு இல்லை என்பதாலும், குறிப்புரையாசிரியர் தம் உரையைத் தன்மைநெறியில் நடத்தியுள்ளார் என்பதாலும், குறிப்புரையாசிசிரியரே ஒரு தொகுப்புநூல் ஆசிரியர் என்பதாலும் காரி ரத்தினக் கவிராயர் பாப்பாவினத்தின் நூலாசிரியரும் குறிப்புரையாசிரியருமாவார் என்று கருத இடமுண்டு. நூலின் பிற்பகுதியில் அமைந்த பரிபாடல் வேறொருவரால் எழுதிக் குறிப்புரை அமைக்கப்பெற்றுப் பிற்சேர்க்கையாக ஆக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதும் புலனாகின்றது.





# சங்க இலக்கியத்தில் பொருளியல் நோக்கு

பேரா. டாக்டர் கா. பாலுசாமி

முன்னுரை :

சங்ககாலம் என்பது வரலாற்றுக்கு முற்பட்ட காலம் தொடங்கி கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரையுள்ள காலப் பகுதியாகும். இக்காலத்தில் தமிழில் தோன்றிய சிறந்த இலக்கண இலக்கியங்கள் பலவாகும். அவற்றுள் தொல்காப்பியம், திருக்குறள், எட்டுத் தொகை, பத்துப்பாட்டு, இரட்டைக் காப்பியங்கள் முதலியன குறிப்பிடத்தக்கனவாகும். இச்சங்க நூல்கள் தமிழ் மொழியின் சிறப்பை உணர்த்துவதோடு தமிழர்தம் அரசியல், பொருளியல், கலையியல்,பண்பாட்டியல் முதலிய பல்வேறு வாழ்வியற்கூறுகளை யும் புலப்படுத்துவனவாகும். இக்காலத்தில் முடியாட்சி நிலவியது என்பது வெள்ளிடைமாலை. எண்ணற்ற அரசியற் கருத்துக்கள் இலைமறை காய் போலச் சங்க இலக்கியங்களில் பரவலாகக் காண லாம். அவ்வாறே தமிழர்தம் பொருளியற் கருத்துக்களும் பலவாகக் காணப்படுகின்றன.

பொருளாதாரம் என்பது இன்று ஒரு பெருங் கலையாக வளர்ந் துள்ளது. சங்ககாலத்தில் தமிழர்தம் பொருளியற் கருத்துக்கள் கலையினது கட்டுக்கோப்பைப் பெறவில்லை எனினும், அவர்தம் கருத்துக்கள் இக்காலப் பொருள்நூல்கள் கூறும் கருத்து நுட்பங் களுக்குப் பேரளவு ஈடுகொடுக்கத் தக்கவை என்பது ஒருதலை. இவ்வுண்மையை எடுத்துக்காட்டுவதே இவ்வாராய்ச்சிக் கட்டுரை யின் நோக்கம்.

அரசுப்பொருளாதாரம்

அரசுப்பொருளாதாரம் என்பது ஓர் அரசாங்கத்தினது பொரு ளாதார நிலையைக் கூறுவதாகும். இதனை நாட்டுப் பொருளா தாரம் என்றும், பொதுப் பொருளாதாரம் என்றும் கூறலாம். இப்

பொருளாதாரக் கூறு இன்று ஒரு பெருங் கலையாகக் கருதப்படுகின்றது. ஒருநாட்டின் அரசாங்கம் இயங்குவதற்குரிய மூலாதாரம் அதன் வரவு, செலவு, வருவாய்க்குரிய வழிகள், செலவாகும்விதம், எவ்வாறு செலவு செய்தல் வேண்டும் என்ற முறை, இன்ன பிறவற்றை விரிவாகக் கூறுவது இப் பொருளாதாரக் கலையின் பணியாகும்.

பொருளாதாரம் தனிப்பொருளாதாரம், பொதுப் பொருளாதாரம் என இரு வகைப்படும். தனிப்பொருளாதாரம் என்பது குடும்பப்பொருளாதாரம். பொதுப்பொருளாதாரம் என்பதுநாட்டுப் பொருளாதாரம். இவ்விரண்டினுக்குமிடையே உள்ள ஒற்றுமைகள் சில; வேற்றுமைகள் பல. இவற்றை விரிப்பது இங்கு மற்றொன்று விரித்தலாக முடியும். ஆகவே, பொதுப் பொருளாதாரமாகிய நாட்டுப் பொருளாதாரத்தின் பல்வேறு கூறுகளையும் ஈண்டு ஆராய்வோம்.

நாட்டுப் பொருளாதாரம் அல்லது அரசுப் பொருளாதாரம் என்பது இருபெரும் பிரிவுகளுள் அடங்கும். ஒன்று வருவாய் பற்றியது; மற்றொன்று செலவு பற்றியது. ஒரு நாட்டிற்குரிய பொருள் வருவாய் என்பது அந்நாட்டு மக்கள் தரும் வரி அல்லது கடமை முதலியனவாகும். பொருளின்றித் தனிமனித வாழ்க்கை இல்லையாதல் போல ஓர் அரசும் பொருளின்றேல் இயங்காது.

"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்லது இல்லை பொருள்"

என்பார் வள்ளுவர். இப்பொருளை அரசு எவ்வாறு ஈட்டுவது? உலகில் நாகரிகம் தொடங்கிய நாள் முதல் ஓர் அரசு தனக்குரிய பொருளை மக்களிடமிருந்து பல்வகை வரிகள் வாயிலாகப் பெறுகிறது. அரசு இதற்கென வரிவிதிப்புக் கொள்கைகளையும் வரையறை செய்து கொள்கிறது. இவ்வரிவிதிப்புக் கொள்கை ஆராயுமிடத்து, மக்களிடையே நிலவும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைச் சமன் செய்யவும் பயன்படுகிறது.

வருவாய்க்குரிய வழிகள்

ஒரு நாட்டினது அல்லது அரசினது வருவாய்க்குரிய வழிகள் மிகப் பலவாகும். அவற்றுள் ஒன்று மக்களிடமிருந்து பெறும் வரிகள் என்பதனை முன்னர்க் கண்டோம். அவ்வரிகள் யாவை?

தமிழ் நூல்களில் வரி பற்றிய பல்வேறு கலைச் சொற்கள் காணப் படுகின்றன. இறை, திறை, இரவு, கடமை, குடிசை, ஆயம், கொண்டி, உறுபொருள், உல்குபொருள் முதலிய சொற்கள் மக்கள் அரசுக்கு வழங்கும் பல்வேறுபட்ட வரிகளைக் குறிப்பனவாகும். இக்கலைச் சொற்கள் நுட்பமான பொருள் வேறுபாடுகள் கொண்டு வழங்கப் பட்டன. எனவே இவற்றை ஆழமாகச் சிந்தித்தல் வேண்டும். இவை தமிழ்மொழியில் சொல் வளத்தை எடுத்துக்காட்டுவதோடு அம்மொழியின் நுட்ப திட்டங்களையும் புலப்படுத்துவனவாகும். தமிழர்தம் பொருளாதாரச் சிந்தனைகள் எத்துணை விரிவும் விளக்கமும் உடையன என்பதும் நன்கு புலப்படும்.

வரிகள்

(அ) இறை : இஃது இறைவன் அல்லது அரசனுக்கு மக்களால் வழங்கப்படுவது எனப்பொருள்படும். அக்காலத்தில் அரசன் இறைவன் என்று கருதப்பட்டான். "உலகபாலர் உருவாய் நின்று உலகங் காத்தலின் 'இறை' என்றார் என்பது பரிமேலழகரது உரைவிளக்கம். 'இறு' என்பதன் அடியாகப் பிறந்த 'இறை' என்பது மக்களால் இறுக்கப்படுவது அல்லது வழங்கப்படுவது என்னும் பொருளதாகும். இது பெரும்பாலும் நிலத்தின் மீது விதிக்கப்படும் வரியாகும். நிலமுடையார் யாவரும் அரசுக்கு நிலவரி இறுத்தல் வேண்டும் என்பது அன்று முதல் இன்று வரையுள்ள நடைமுறையாகும். 'இறையிலி நிலம்' என்னும் தொடர்ப் பொருளும் ஈண்டு நோக்கத்தக்கதாகும்.

(ஆ) திறை : திறை என்பது தோற்ற மன்னர்கள் வென்ற மன்னர்களுக்கு ஆண்டு தோறும் வழங்கும் பொருளாகும்.

"பணிந்தோர் தேஎந் தம்வழி நடப்பப்
பணியார் தேஎம் பணித்திறை கொண்மார்"

என்னும் மதுரைக்காஞ்சி அடிகள் இதனை வலியுறுத்தும்.

(இ) இரவு : இஃதும் ஒருவகை வரியாகும். இது மக்கள் முறையாகக் கட்ட வேண்டியதன்று. சில சூழ்நிலைகளில் மக்களிடமிருந்து கட்டாயமாகப் பெற வேண்டிய பொருள் இதனுள் அடங்கும். மக்களது விருப்பம். விருப்பமின்மைக்கு அப்பாற்பட்ட நிலையில் ஓரளவு அச்சுறுத்தலின் வாயிலாகக் கொள்ளப்படுவது இரவு

எனப்படும். ஆறலை கள்வர் வழிப்போக்கரிடமிருந்து வலிதிற் பறிக்கும் கொள்ளைப் பொருள் போன்றதாகும் இது.

> "'வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
> கோலொடு நின்றான் இரவு"

என்னும் குறட்பா இதற்கு எடுத்துக்காட்டு. இதற்குப் பரிமேலழகர் 'வேலொடு நின்றான் என்றதனால் பிறரொடு நில்லாமையும், இரவு என்றதனால் இறைப்பொருள் அன்மையும் பெற்றாம், தாராக்கால் ஒறுப்பல் என்னும் குறிப்பினன்' எனக்கூறும் விளக்கவுரை இதனை மேலும் வலியுறுத்தும். ஆயின், ஒருசார் ஆராய்ச்சியாளர் நாட்டில் ஏற்படும் எதிர்பாராச் சூழ்நிலைகள் காரணமாக அரசு செல்வர்கள்பால் வேண்டிப் பெறும் அல்லது இரந்து பெறும் சிறப்புப் பொருள் என்பர். இஃது இக்கால வழக்கில் நன்கொடை எனப்படும். எது எவ்வாறாயினும், இரவு என்பது அரசுக்கு வழங்கப்படும் சிறப்பு வரிப்பொருள் எனவே கொள்ளப்படும்.

(ஈ) புரவு : புரவு என்பது புரத்தல் அல்லது காத்தல் எனப் பொருள்படும். எனவே, இது ஒரு காப்பு வரியாகும், நாட்டில் யாதானும் ஒரு பகுதியினர் சிறப்பாகப் புரக்கப்பட வேண்டுமெனில் அப்போது அரசு ஒருவகைச் சிறப்பு வரி விதிப்பதுண்டு. குறிப்பாக, ஒரு நெருக்கடிநிலை தோன்றுகிற போது அதனைப் பொருளாதார முறையில் சந்திப்பதற்கு இத்தகைய புரவு விதிக்கப்படுவதுண்டு. 'குடிபுரவு இரக்கும்' என்னும் புறநானூற்றுத் தொடர் இதனை நன்கு விளக்கும்.

(உ) கடமை : இதன் சொற்பொருள் உரிமை என்பதன் மறுதலைப் பொருளாகும். ஒவ்வொரு குடிமகனும் அரசுக்குச் சில கடமைகள் ஆற்ற வேண்டும். அக்கடமை உழைப்பாகவும் இருக்கலாம்; பொருளாகவும் இருக்கலாம். இதனையே, இக்காலத்தார் நிலவரி என்பர். இஃது ஒருவனது நிலவுடைமையால் ஏற்படும் கடமையாகும். இறை என்பதும் கடமை என்பதும் ஒரே வகையான வரியைக் குறிப்பதற்குப் பல்வேறு காலக்கட்டங்களில் வழங்கப்பட்ட ஒருபொருட் கிளவிகளாகும்.

(ஊ) குடிமை : இது குடி அல்லது குடும்பம் என்பனவற்றோடு தொடர்புடைய சொல். சமுதாயத்தில் தனிமனிதன் சிறப்புக்குரிய அங்கமாகக் கருதப்படுவதில்லை. அவன் இல்லறம்

ஏற்றுக் குடும்ப வாழ்வு நடத்தும் நிலையில்தான் அரசு அவ-னைச் சமுதாயத்தின் அங்கமாக மதிக்கிறது. அவன் நாடோடி யாகத் திரியாமல் அவன் மனையறம் மேற்கொள்ளும்போது தனக்கென வீடமைத்துத் தங்குகிறான். அவனது குடும்ப உடை-மையாகிய வீடு, வீட்டுமனை ஆகியவற்றின் மீதும் அரசு வரி விதிக்கிறது. குடி மீது விதிக்கப்பட்ட வரி குடிமை எனப்பட்டது. ஆயின், வரலாற்றுப் பேரறிஞராகிய நீலகண்ட சாத்திரியார் இதனை மக்கள் அரசுக்குப் பொதுவாக வழங்கும் வரியைக் குறிப் பதாகவே கொண்டார்.

(எ) ஆயம் : திருவள்ளுவர் காலத்தில் சூதாட்டத்தில் பங்குபெறும் இருவர் வரையறுத்துக்கொள்ளும் பந்தயப் பொருளே ஆயம் எனப்பட்டது. சூதாட்டத்தில் வென்றவன் தோற்றவன் பால் பெற்ற தொகை ஆயமாயிற்று. காலப்போக்கில் ஆயம் என்பது பொருள் மாற்றம் பெற்றது. மக்களுள் ஒரு சாரார் தத்தம் தொழில் நிமித்தம் அரசுக்கு வழங்கும் தொழில் வரி ஆயம் என்று குறிக்கப்பட்டது. ஆடை வெளுத்துத் தரும் தொழிலாளி தான் துவைப்பதற்குப் பயன்படுத்தும் கல்லின்மீது வரி செலுத்-தியமை காணப்படுகிறது. இது கல்லாயம் எனப்பட்டது. வர-லாற்றுப் பேரறிஞர் மகாலிங்க சாத்திரியார் தமது தென்னிந்திய ஆட்சி முறை என்னும் ஆங்கில நூலில் இதனை விரித்துள்ளார்.

(ஏ) கொண்டி : சங்க காலத்தில் அரசர்களுக்கு இடையே நடந்த கடற்போரில் வென்ற அரசன் தோற்றவனிடமிருந்து கொண்ட பெரும்பொருள் கொண்டி எனப்பட்டது. இது போர் குறித்த ஒன்றேயாகும். அமைதிக் காலத்தில் இது பற்றிய பேச்சில்லை. 'கொண்டி வேண்டுவனாயின்' என்னும் புறநானூற் றுத் தொடர் இதனை மெய்ப்பிக்கும்.

(ஐ) உறுபொருள் : இது வரி அன்று. ஆயினும் இதுவும் அரசுக்குரிய பொருளே. செல்வர் வழித்தோன்றல்களின்றி இறப்ப ரேல் அவர்கள் ஈட்டிவைத்த பொருளும், பிற உடைமைகளும் அரசின் உடைமைகள் ஆயின. அன்றியும் கண்டெடுக்கப்படும் அல்லது தோண்டி எடுக்கப்படும் பெபருட்குவைகள் அரசுக்கே உரியவாயின. இவ்வாறு வரும் பொருள் உறுபொருளாம்.

''உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்''

என்னும் குறளும், அதற்குப் பரிமேலழகர், 'வைத்தார் இறந்து போக நெடுங்காலம் நிலத்தின்கண் கிடந்து பின் கண்டெடுத்தது உம், தாயத்தார் பெறாததூ உமாம்' எனவுரைக்கும் விளக்கமும் இங்கு நோக்கத்தகும்.

(ஓ) உல்குபொருள் : இது இக்காலத்து வழங்கி வரும் வணிக வரி, சுங்க வரி போன்றதாகும். ஒரு நாட்டிலிருந்து பிற நாட்டுக்கு ஏற்றுமதியாகும் பொருள் மீதும் இறக்குமதியாகும் பொருள்மீதும், விதிக்கப்படும் வரி சுங்கவரியாகும். இத்தொடருக்குப் பரிமேலழகர், 'சுங்கமாகிய பொருளும்' என்று கூறிப் பின்னும், 'சுங்கம் கலத்தினும் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது' எனக் கூறும் விளக்கம் இங்கு மனங்கொள்ளத்தகும்.

(ஓ) தெறுபொருள் : தெறுதல் என்பது பகைவெல்லுதல் எனப் பொருள்படும். இதுவும் போர்க்காலத்தில் தோற்றவனிடமிருந்து வென்றவன் போர்க்களத்தே வாரிக்கொண்டு வரும் பொருளாகும். இப்பொருளை அரசன் அரசுடைமையாகக் கருதாது தனக்கு வெற்றி விளைவித்த வீரர்களுக்குப் பகிர்ந்து தரப்பட்ட பொருளாகும் இது கொண்டியினும் வேறுபட்டது கொண்டியும் தோற்ற அரசன்பால் பெறுவதாயினும் அஃது அரசுக்கே உரியதாம்.

இதுகாறும் அரசுக்குரிய பொருள் வரும் பல்வேறு வழிதுறைகளும், வரிவகைகளும் ஆராயப்பட்டன. இனி, அரசு விலக்கத்தகும் சில வரவினங்கள் பற்றிச் சிந்திப்போம்.

**விலக்கப்பட்டவை :**

திருவள்ளுவர் ஓர் அரசு எவ்வெவ்வகையில் பொருளீட்ட முற்படுதல் தகாது என்பதனை வலியுறுத்திக் கூறியுள்ளார். வரைவின் மகளிர், கள்ளுண்ணாமை, சூது, ஆகிய மூன்று அதிகாரங்களும் அரசுக்கு விலக்கப்பட்ட பொருள் பற்றி விரித்துரைக்கின்றன. கள்ளின் மீதும், வரைவின் மகளிர் மீதும், சூதாட்டத்தின் மீதும் வரி விதிப்பதன் வாயிலாக அரசுக்குப் பெரும்பொருள் கிடைக்கலாம். கௌடில்லியர் தமது அர்த்தசாத்திரத்தில் இவற்றை வரவேற்றிருப்பவும், திருவள்ளுவப் பெருந்தகை இவற்றை விலக்கியுள்ளமை நினைந்து மகிழத்தகும். ஓர் அரசின்கடமை அங்கு வாழும் மக்களுக்கு நல்வாழ்வு அளிப்பதேயாம். வாழ்க்கை

நலமாவது ஒருவனது உடலையும், உள்ளத்தையும் பொறுத்தது. மேற்கண்ட மூன்றனுள் கள்ளும், வரைவின் மகளிரும் உடல்நலக் கேட்டுக்குக் காரணம். சூது ஒருவனது உளநலத்தைக் கெடுக்கும். அன்றியும் மக்களை எளிய முறையில் வேகமாகக் கவர்ந்து ஈர்த்து அவர்களைக் கெடுப்பவையாகும் இவை. எனவே, வாழ் வாங்கு வாழ வைக்க விரும்பிய வள்ளுவப் பெருந்தகை இம்முத் தீமைகளையும் கடிந்தொழிந்தார். ‘குடி குடிகெடுக்கும், குடிப் பழக்கம் உடல் நலத்தைக் கெடுக்கும்’ என்னும் விளம்பரத்தையும் தொங்க விட்டு, கள்ளுக்கடைகளைத் திறப்பதும், அதன் வாயிலாகப் பொருள் ஈட்டுவதும் வள்ளுவர் உள்ளத்தைப் புண்படுத்துவதாகும்.

‘ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால்’
‘சூதின், வறுமை தருவதொன் றில்’
‘இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு’

என்று வள்ளுவர் கூறியிருப்பதும், இவை அங்கவியலுள் கூறப் பட்டிருப்பதும் சிந்திக்கத்தகும்.

‘மயக்கும் கள்ளும் மன்னுயிர் கோறலும்
கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்’

என்ற மணிமேகலை அடிகளும் கவனத்தில் கொள்ளத்தக்கன. எனவே, தமிழ்ப் பண்பாடு, மக்களுக்கு நல்வாழ்வு தரும் நல்லொழுக்க நெறிப்பட்ட பொருளியற் கொள்கையையே சங்க காலம் தொடங்கி வலியுறுத்தி வருகின்றது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி ஆகும்.

**செலவினங்கள் :**

திருவள்ளுவர், ஓர் அரசு தனக்குரிய பொருள் வரும் வழி களைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்பதையும், அவ்வாறு வந்து ஈண்டிய பொருளை எவ்வாறு செலவிடுதல் வேண்டும் என்பதையும் ஒரு குறட்பாவில் வெளிப்படுத்தியுள்ளார்.

“இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு”

என்பது அக்குறட்பா. இதில் வகுத்தல் என்னும் தொடர் சிந்தனைக்கு உரியது. ஓர் அரசு எவ்வெவ்வினங்களுக்குச் செலவு செய்தால் அதனால் மக்களுக்கு நிறைந்த நன்மைகள் ஏற்படும் என்பதனை உணர்ந்து கொள்ளுதல் இன்றியமையாதது. டால்டன் என்ற மேனாட்டுப் பொருளாதார மேதை இதுபற்றிப் பின்வருமாறு கூறியுள்ளார். ''பொருளாதாரம் என்பது ஒரு கலை நூல்; அறிவியல் என்றும் அதனை அழைக்கலாம். சில ஒழுக்க நெறி முறைகள் இக்கலை நூலில் வற்புறுத்தப் படுவதோடன்றி அடிப்படையான ஒரு பேருண்மையையும் அது புலப்படுத்த வேண்டும். அதாவது, சமுதாயத்தில் வாழும் பெரும்பாலான மக்களுக்கு மிகப் பல நன்மைகள் விளையும் அளவுக்குப் பொதுப் பொருளைச் செலவிடுவதே ஒரு நல்ல அரசின் தலையாய பணியாகும்''.

ஓர் அரசு நாட்டின் பாதுகாப்பு, அதன் வளர்ச்சி, வாணிப முன்னேற்றம் ஆகிய மூன்று துறைகளில் பெரிதும் கவனம் செலுத்த வேண்டும். இதற்குச் செலவாக்கப்படும் பொருள் நிறைந்த பயனை விளைவிப்பதாகும். படைகளைப் பேணி நாட்டிற்கு உள்ளேயும் வெளியேயும் தோன்றும் பகையை உரிய காலத்தில் களைவது அரசின் முதற்கடமையாகும். திருவள்ளுவர், படைமாட்சி, படைச்செருக்கு என்ற இரண்டு அதிகாரங்களை அமைத்துக் கூறும் நோக்கம் சுட்டுக்குரியதாகும். ஒரு நாடு உரிமை இழக்காமல் வாழவேண்டுமாயின் அதற்கு ஏற்ற படை வன்மை வேண்டும். ஓர் அரசுக்குரிய அங்கங்கள் ஆறுனுள்ளும் படையை முன் வைத்துக் கூறும் திருவள்ளுவரது நோக்கம் இதுவேயாம். அமைதிக் காலத்தும் போர்க்காலத்தும் படைகளைப் பேணிக் காத்தற்குப் பெரும்பொருள் செலவாகும் இது தவிர்க்க முடியாத செலவினமாகும்.

மக்களின் வாழ்க்கை முன்னேற்றத்திற்கும் வளத்திற்கும் ஏற்ற பல்வேறு சமுதாயத் திட்டங்களை நிறைவேற்ற வேண்டியது அரசின் மற்றொரு கடமையாகும். குளம் தொட்டு வளம் பெருக்குவதும், காடு கொன்று நாடாக்குவதும் இன்ன பிறவும் அக்கால அரசுகள் மேற்கொண்ட பல்வேறு சமுதாயத் திட்டங்களாகும். கரிகால் பெருவளத்தான் செயல் இங்குக் கவனிக்கத் தக்கது.

"வித்திவா னோக்கும் புன் புலங் கண்ணகன்
வைப்பிற் றாயினும் நண்ணி யாளும்
இறைவன் தாட்குத வாதே யதனால்
அடுபோர்ச் செழிய இகலாது வல்லே
நில்னெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோ ரம்ம விவண்தட் டோரே
தள்ளா தோரிவண் தள்ளா தோரே''

என்னும் புறநானூற்று அடிகள் இதனை மேலும் வலியுறுத்தும். மேலும், நாட்டில் நடைபெறும் வானிபம் முதலிய பல்வேறு தொழில் துறைகளைக் கண்காணித்தற்கும், நெறிப்படுத்தற்கும் கரிகாலன் போன்ற அக்கால அரசர்கள் பல்வேறு அலுவலர் களையும் மேற்பார்வையாளர்களையும் பணி கொண்டனர் என்பது இலக்கியச் சான்று. பட்டினப் பாலையுள் கடியலூர் உருத்திரங் கண்ணனார்,

''வேலாழி வியன்றெருவின்
நல்லிறைவன் பொருள்காக்கும்
தொல்லிசைத் தொழில்மாக்கள்''

என்று குறித்திருப்பது மனங்கொள்ளத் தகும்.

இறுதியாக, அக்கால அரசர்கள் பல்வேறு கவிஞர்களுக்கும், கலைஞர்களுக்கும் அரசின் சார்பில் பொருள் வழங்கிச் சிறப்பித் தார்கள். கவிஞர்கள் அக்காலத்தில் சான்றோர்கள் என்று அழைக் கப்பட்டார்கள். 'சங்கச் சான்றோர்' என வழங்கப்படுவது காண்க. சங்கப் புலவர்கள் கஞ்சிக்குக் கவிபாடியவர்கள் அல்லர். அரசுக்கும் மக்களுக்கும் இடையே நல்ல உறவினை வளர்த்த பண்பாளர்கள் அவர்கள். அவர்கள் நம்பிக்கைக்கு உரிய உண்மையான மக்கள் தொண்டர்களாக விளங்கினார்கள். அரசு தவறு செய்யுமாயின் இடித்துரைத்தலும், நன்மை செய்யின் பாராட்டி மகிழ்தலும் அவர் களது பண்பாகும். மக்கள் குறைகளையும் சமுதாயத்தில் அவ்வப் போது நிலவும் நலிவு மெலிவுகளையும் உரிய காலத்தில் அரசின்

கவனத்திற்குக் கொண்டு வருதலைத் தமது கடமையாகக் கொண்டார்கள். இவ்வாறாக, அறம், பொருள், இன்பங்களின் பொருட்டு மன்னன் நாட்டின் செல்வத்தை செலவிட்டான் என்பது கண்கூடு.

**பழங்கடன் நீக்குதல் :**

இக்காலத்தைப் போலவே அக்காலத்திலும் வேளாண்குடி மக்களே பலராக இருந்தனர். உழவுத்தொழிலே உயிர்த்தொழிலாகக் கருதப்பட்டது. மழை பொய்த்தல் முதலிய பல்வேறு காரணங்களால் சில ஆண்டுகளில் விளைவு பாதிக்கப்பட்டதுண்டு. வேளாண் மக்கள் அதனால் பேரிழப்புக்கு ஆளாயினர். தாம் பட்ட கடன்களை அரசுக்குத் திருப்பிச் செலுத்த முடியாமல் இடர்ப்பட்டனர். இத்தகு காலகட்டங்களில் சங்கப்புலவர் சிலர் துணிவுடனும், சமுதாய உணர்வுடனும் அரசனை நேரில் கண்டு மக்கள் குறைகளை எடுத்துக்கூறி அவர்களின் கடன்களை நீக்கிவிடுமாறு வேண்டிக் கொண்டனர் என்ற செய்தி புறநானூற்றுப் பாடல் ஒன்றில் சித்திரிக்கப்பட்டுள்ளது என்பது யாவரும் அறிந்ததே. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை வெள்ளைக்குடி நாகனார் கண்டு உழவர்தம் பழங்கடன் நீக்கப் பாடிய அப் புறநானூற்றுப் பாடலின் பின்வரும் அடிகள் நினைவில் கொள்ளத் தக்கவை :

> 'பகடு புறந்தருநர் பாரம் ஓம்பி,
> குடி புறந்தருகுவை ஆயின் நின்
> அடி புறந்தருகுவர், அடங்கா தோரே''





# தமிழ், தெலுங்குச் சதகங்கள் ஒப்பீடு

டாக்டர்.
ப. பழனியமாள்)
(தொடர்ச்சி)

**7 சதக இலக்கிய வகைகள் :**

தமிழ், தெலுங்குச் சதகங்களை அவற்றின் பாடுபொருள் அடிப்படையில் பின்வருமாறு பகுக்கலாம் :

1. துதிச் சதகங்கள்
2. நீதிச் சதகங்கள்
3. வரலாற்றுச் சதகங்கள்
4. கதைச் சதகங்கள்
5. தத்துவச் சதகங்கள்
6. வகைச் சதகங்கள்
7. மொழி பெயர்ப்புச் சதகங்கள்

**துதிச் சதகங்கள் :**

சமயத்தைப் பரப்புவதற்காகப் புலவர்கள் பிற இலக்கிய வகைகளைப் பயன்படுத்தியது போலவே சதக இலக்கிய வகையையும் பயன்படுத்தினார்கள். அதனால் பக்திச் சதகங்களைப் பாடிய புலவர்கள் பொது மக்களுக்குப் பயன்படும் வகையில் நாட்டுப் பாடல்களில் கண்ட பல செய்யுள் வடிவங்களைப் பயன்படுத்தியும், எளிய பேச்சு வழக்குச் சொற்களைக் கையாண்டும் பாடல்களைப் பாடினர். சிலருடைய பாடல்கள் மறைபொருள் உடையவை. வெளிப்படையாகப் பார்க்கும்பொழுது எளிய பொருள் ஒன்று தோன்றும். ஆழ்ந்து கற்றால் உட்பொருள் ஒன்று உணரப்படும். இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு தமிழிலும் தெலுங்கிலும் எண்ணற்ற சதகங்கள் தோன்

றியுள்ளன. அவற்றைப் பாட்டுடைத் தலைவர்களின் அடிப் படையில்,

1. சிவபெருமானைத் துதிக்கும் சதகங்கள்
2. திருமாலைத் துதிக்கும் சதகங்கள்
3. தேவியரைத் துதிக்கும் சதகங்கள்
4. அடியார்களைத் துதிக்கும் சதகங்கள்

என்று பிரித்து நோக்கலாம்.

**சிவபெருமானைத் துதிக்கும் சதகங்கள் :**

சைவ சமயத்தின் முழுமுதற் பொருளான சிவபெருமான் பல்வேறு திருத்தலங்களில் பல்வேறு நாமங்களில் வீற்றிருக்கின்றான். அதனால் சதகப் புலவர்கள் சிவபெருமானைப் பல்வேறு நாமங்களில் புகழ்ந்து பற்பல சதகங்களைப் பாடினர். அத்துதி நூல்கள் இறைவன் பெயராலும், இறைவன் எழுந்தருளியுள்ள திருத்தலத்தின் பெயராலும் குறிக்கப் படுகின்றன.

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சிதம்பரநாத முனிவர் தில்லை நடராசப் பெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு நடராச சதகத்தைப் பாடினார். இந்நூலில் சிதம்பர மான்மியம், பதியியல்பு, இலிங்கத்தின் அமைப்பு, வீடு பெறுவதற்கான வழிகள் போன்ற செய்திகள் காணப்படுகின்றன. இச் சதகம் இறைவன் பெயரில் அமைந்துள்ளது.

ஐயாத்துரை ஞானியார் என்ற புலவர் நடராசப் பெருமானையும், அவன் வீற்றிருக்கும் திருத்தலத்தையும் புகழ்ந்து தில்லை நடராய சதகத்தை இயற்றியுள்ளார். இந்நூல் திருத் தலத்தின் பெயராலும், இறைவன் பெயராலும் வழங்கி வருகிறது.

திருவண்ணாமலையில் கோயில் கொண்டுள்ள அருணாசலக் கடவுளைத் துதிக்க விரும்பிய காஞ்சிபுரம் சபாபதி முதலியார் இறைவன் பெயரில் அருணாசல சதகத்தைப் பாடினார். இச் சதகம் முழுவதும் இறைவனைத் துதிப்பதாகவே அமைந்துள்ளது. இதே அடிப்படையில் இராமேசுவரத்தில் குடிகொண்டுள்ள இராம லிங்கப் பெருமானைத் துதிக்கும் வகையில் இராமலிங்க சதகம் பாடப் பட்டுள்ளது. தூத்துக்குடியில் வாழ்ந்த வீரபாண்டியப் புலவர் என்னும் சங்கர மூர்த்திப் புலவர் இந்நூல் முழுவதையும் இறைவனைத் துதிக்கும் துதி நூலாகவே இயற்றியுள்ளார்.

சோமசுந்தர சுவாமி என்ற கவிஞர் மதுரையம்பதியில் அருள் செய்யும் சொக்கலிங்கக் கடவுளைத் தலைவனாகக் கொண்டு சொக்கலிங்கக் கடவுள் தோத்திர சதகத்தை எழுதி யுள்ளார். நூல் முழுவதும் இறைவனின் பெருமைகளைப் பாடும் வகையில் அமைந்துள்ளது. இவற்றைத் தவிர சிவபெருமான் பெருமைகளையும் அருட்சிறப்புக்களையும் புகழ்ந்துரைக்கும் வகையில் மழவை சிங்கார சதகம், சிவகுரு சதகம் போன்ற பிற சதக நூல்களும் தமிழில் தோன்றியுள்ளன.

தெலுங்கில் கி.பி 1160–இல் மல்லிகார்ச்சுன பண்டிதர் 'சிவ தத்துவசாரம்' என்ற நூலை இயற்றினார். சிவனே முழுமுதற் கடவுள் என்பதை வலியுறுத்துவதற்காகவும், வீரசைவக் கருத்துக் களைக் கூறுவதற்காகவும் பால்குறுக்கி சோமநாதர் பசவலிங்க சதகத்தை இயற்றினார். இந்நூலில் பசவலிங்க என்ற மகுடம் அமைந்த 300 பாடல்கள் உள்ளன.

ஒவ்வொரு சைவத் திருத்தலத்திலும் வெவ்வேறு பெயர் கொண்டு விளங்கும் சிவபெருமானின் மீது அவ்வப் பெயரால் துதிச்சதகங்கள் பாடியவர் தூர்சடி. அவற்றுள் கத்தீசுவர சதகம் முதலிடம் பெறுகின்றது. இதில் தூர்சடி பிறப்பும் இறப்பும் அற்றவன் சிவன் ஆதலால், திருமாலைப்போல பல அவதாரங் கள் எடுக்கவில்லை என்ற கருத்தை நிலைநாட்டியுள்ளார்.

இவை தவிர தெலுங்கில் விசுவநாதசதகம், மிருத்யுஞ்சய சதகம், போன்ற பிற சதகங்களும் சிவன்புகழ்பாடும் துதிச்சதகங் கள் ஆகும்.

திருமாலைத் துதிக்கும் சதகங்கள் :

வைணவ சமையத்தினர் வழிபடும் ஒரே பொருளான திருமாலைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு அவன் புகழ் பரப்பும் வகையில் வைணவ சமயத் துதிச் சதகங்கள் தோன்றின.

தம்மை விரும்பி வழிபடும் அடியார்களின் பொருட்டுத் தீமை களை நீக்கி நன்மைகளை நிலைநாட்டுவதற்காக இறைவன் பிற உருக்கொண்டு உலகிற்கு வருதல் அவதாரம் எனப்படும். காக்கும் கடவுளான திருமால் உலக மக்களின் அச்சத்தை அகற்றி

அறத்தை நிலைநாட்டுவதற்காக மண்ணுலகில் மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனம், இராமன், பலராமன், பரசுராமன் கிருட்டிணன், கற்கி ஆகிய பத்து அவதாரங்கள் எடுத்தார். இச் செய்தியைக் கோபாலகிருட்டிண தாசர் எம்பிரான் சதகத்தில் குறிப் பிட்டுள்ளார். காஞ்சி மாநகரில் வீற்றிருக்கும் அத்தகிரிப் பெருமா னைப் புகழ்ந்து அவன் பெருமைகளை விரித்துக் கூறும் தன்மை யில் எம்பிரான் சதகம் பாடப்பட்டுள்ளது.

மேற்கூறிய பத்து அவதாரங்களையும், பத்து அவதாரஙகளின் வாயிலாகத் திருமாலின் திருவருட் சிறப்புக்களையும் பறைசாற்றும் வகையில் புலவர் நாராயண தாசர் வடவேங்கட நாராயண சதகத்தை எழுதினார். மேலும் பன்னிரு ஆழ்வார்களின் பக்திச் சிறப்பையும், அடியார்களுக்கு இறைவன் அருள் செய்த தன்மை களையும் வைணவ சமயப் புலவர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர். இலக்குமி காந்த சதகம், கோதண்டராமசதகம், கோவிந்தசதகம், சீனிவாசசதகம், தசரதராமசதகம், திருவேங்கடசதகம் போன்ற சதகங்கள் திருமாலின் புகழ்பாடும் துதிச் சதங்களாகவே அமைந் துள்ளன.

ஆந்திராவில் வைணவம் தலைதூக்கி நின்ற காலத்தில் திருமாலைப் பாடும் சதகங்கள் பல தோன்றின. திருமாலின் அவதாரங்களைப் பற்றியும், வைணவத் திருத்தலங்களில் வீற்றி ருக்கும் இறைவனைக் குறித்தும் சதகங்கள் பாடப்பட்டுள்ளன.

கொலனிப்பாக்கம் என்ற திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள வீரநாராயணன் என்ற இறைவனின் மீது இராவூரி சஞ்சீவக் கவிராயர் வீரநாராயண சதகத்தைப் பாடியுள்ளார்.

தெலுங்குக் கவிஞர்கள் திருமாலின் பத்து அவதாரங்களில் இராமாவதாரத்தையே விரும்பிப் பாடியுள்ளனர். இராமபிரானைத் தாம் விரும்பி வழிபடும் தெய்வமாகக் கருதிப் பல துதிச்சதகங்க ளைப் படைத்தனர். இராமபிரானைப் பாடிய பல சதகங்களில் கஞ்சொல் கோபன்னா பாடிய தாசரதி சதகமே மக்களிடையே பெருஞ்செல்வாக்குப் பெற்றுத் திகழ்கின்றது.

கிருட்டிணாவதாரத்தைப் பாடும் சதங்களில் தேவகீ நந்தன சதகமே முதலில் தோன்றியது. இந்நூல் கிருட்டிணபகவானின் திருவிளையாடல்கள் பற்றி விவரிக்கின்றது.

சுந்தர நாராயணக்கவி தன்னுடைய உடல் நோயைத் தீர்க்குமாறு திருமாலிடம் அருள் வேண்டி ஆபத்நிவாரண சதகத்தைப்பாடினார். இந்நூலில் திருமாலின் அருட்பெருங் கருணைத் திறத்தை வியந்து பாராட்டிப் புகழ்ந்துள்ளார். இவற்றைத் தவிர இராசகோபால் சதகம், முகுந்த சதகம், வசுதேவ நந்தன சதகம், கிருஷ்ண மஞ்சரி சதகம், முதலியனவும் குறிப்பிடத்தக்க வைணவச் சதகங்களாகும். தமிழை விடத் தெலுங்கில் திருமாலின் புகழ்பாடும் சதகங்கள் அதிகமாகப் பாடப்பட்டுள்ளன.

தேவியரைத் துதிக்கும் சதகங்கள் :

சிவசக்திகளை ஒன்றாயும் வேறாயும் உடனாயும் பாவிக்கின்ற சிறப்பியல்பினைச் சதகநூல்களில் காணலாம். தேவியரை ஆதிசக்தியின் வடிவமாகக் கருதிய சதகப்புலவர்கள் பல சதகங்களை இயற்றியுள்ளார்கள்.

தேவியானவள் எங்கும் நிறைபொருளாக காணப்படும் பொழுது பராசக்தி என அழைக்கப்படுகின்றாள். அவள் பல்வேறு திருத்தலங்களில் வீற்றிருக்கும் பொழுது தில்லையில் சிவகாம சுந்தரி என்றும், மதுரையில் மீனாட்சி என்றும், காஞ்சியில் காமாட்சி என்றும், மாயூரத்தில் அவையாம்பிகை என்றும் சங்கரன் கோயிலில் கோமதியம்பிகை என்றும் பல்வேறு பெயர்களில் அழைக்கப்படுகின்றாள். அப்பெயர்களுக்கேற்ப பல்வேறு சதகங்கள் தேவியைத் துதிக்கும் வகையில் தோன்றியுள்ளன.

தில்லைக் கோயிலில் நடராசப் பெருமானுடன் இணைந்து வீற்றிருக்கும் அம்பிகை சிவகாம சுந்தரியைப் பாட்டுடைத் தலைவியாகக் கொண்டு தில்லை சிவகாமசுந்தரி சதகம் பாடப்பட்டுள்ளது. ஐயாத்துரைஞானியார்அவர்கள் அம்மையின் ஆற்றலைப் புகழ்ந்து அருள் வேண்டுந் தன்மையில் அச்சதகத்தை எழுதியுள்ளார்.

சோழநாட்டு மயிலாடுதுறை என்னப்படும் மாயூரத்தில் எழுந்தருளியிருப்பவள் அஞ்சல்நாயகி. இவ்வம்மையைத் துதிப்பதற்காக கிருட்டிணையர் அவையாம்பிகை சதகத்தைப் பாடினார். அம்மையின் அருட்கொடையையும், கருணைத் திறத்தையும் வியந்து பாராட்டி அருள் வேண்டும் தன்மையை இச்சதகத்தில் காணலாம்.

திருக்கமலப் புலவர் இராசையம்பதி என்னும் சங்கரன் கோயிலில் குடிகொண்டுள்ள அம்பிகையின் பெயரில் கோமதி யம்பிகை சதகத்தை இயற்றியுள்ளார். நூல் முழுவதும் இறைவி யைத் துதிக்கும் வகையில் அம்மையின் அருட்குணங்களும் செயல் களும் புகழ்ந்து பாடப்பட்டுள்ளன.

பொதுவாகத் தமிழில் தேவியரைப் பாடும் சதகங்கள் யாவும் உமையம்மையின் புகழ்பாடும் துதிச் சதகங்களாகவே அமைந் துள்ளன.

தெலுங்குக் கவிஞர்கள் மும்மூர்த்திகளின் தேவியரை ஆதி சக்தியாகப் பரவியுள்ளனர். சரசுவதியைக் கல்வித் தாயாகவும் உலக அன்னையாகவும் கருதிப் பல சதகங்கள் வெளிவந்தன. குருநாதக் கவி எழுதிய சரசுவதீசதகம், லெட்சுமிபதி எழுதிய ஸ்ரீவாணி சதகம், இராமமூர்த்தி எழுதிய சாரதா சதகம், ஸ்ரீநிவாச ராவ் எழுதிய சாரதா சதகம் ஆகியன சரசுவதி பெயரில் எழுதப் பட்ட துதிச் சதகங்களாகும்.

இலக்குமியை வேண்டும் செல்வங்களைத் தரும் தேவியாக வும் நலந்தரும் அன்னையாகவும் கருதினர். அதனால் பரவஸ்து முனிநாதக் கவிலக்ஷ்மீ சதகத்தையும், வெங்கடரமணம்மா வர லக்ஷ்மீ சதகத்தையும் ரங்காச்சாரியக்கவி இந்திரா சதகத்தையும் எழுதினார். இவைகளைத் தவிர மகாகவி விசுவநாத சத்திய நாராயணா என்பவர் ஸ்ரீசைவம், காளகஸ்தி, பர்த்ரகிரி திருவேங்க டம் தாட்சாராமம், வேமுலவாட முதலிய பத்துத்திருத்தலங்களில் வீற்றிருந்து அருள் செய்யும் தேவியரைத் தனித்தனியே பத்து சதகங்களில் துதித்துப் பாடியுள்ளார். இவைகள் யாவும் ஒன்றா கத் தொகுக்கப்பட்டு விசுவநாத மத்தியாக்காலு என்றபெயரில் வெளிவந்துள்ளது. இந்நூல் ஆசிரியரின் புலமைத் திறனுக்குச் சிறந்த சான்றாகத் திகழ்கின்றது.

ஆதி சக்தியைப் பற்றி காமாக்ஷீ சதகம், பாலாம்பிகாசதகம் முத்தியாலம்மா சதகம், கன்னிகா சரமேஸ்வரி சதகம் போன்ற நூல்களும் தோன்றியுள்ளன.

**அடியார்களைத் துதிக்கும் சதகங்கள் :**

தமிழ்ப் பாடிச் சைவம் பரப்பிய நால்வரில் ஒருவர் சுந்தரர். இவர் தமக்கு முன்பு இருந்த சிவனடியார்களை, 'திருத்தொண்

டத் தொகை' பாடித்துதித்தார். சோழராட்சியில் நம்பியாண்டார் நம்பி திருத்தொண்டர் திருவந்தாதியைப் பாடினார். சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராணத்தை இயற்றிச் சிவனடியார்களின் பெருமைகளைப் புலப்படுத்தினார். இம்மர பைப் பின்பற்றிய சதகப் புலவர்கள் தமிழிலும் தெலுங்கிலும் அடி யார்களைப் பாடினர். அடியார்களை இறையாகவே கருதி வழி பட்டனர்.

தமிழில் சைவசமய அடியாரின் புகழ்பாடும் தன்மையில் முத்துக்குமர ஞானியார் சதகம் பாடப்பட்டுள்ளது. நாஞ்சில் நாட் டிலுள்ள கோட்டாற்றிலும், வடசேரியிலும் கோயில் கொண்டுள்ள முத்துக்குமர ஞானியார் என்ற தவமுனிவரைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பட்ட நூலாகும். முத்துக்குமார் சிவப்பற்று மிகுந்த சைவப்பெரியாராதலால் இறைவனோடு வைத்து எண்ணத்தக்க பெருமை உடையவர். பக்திப்பெருக்கி னால் பதிஞானம் பெற்றுப் பரமே பார்த்த பண்புடையாரும் ஆவார். அதனால் ஞானியார்மீது கொண்டுள்ள பக்தி மேலீட் டால் ஆதிமூலப் பெருமாள் முத்துக்குமர ஞானியார் சதகத்தைப் பாடித்துதித்தார். ஞானியாரின் தோற்றப்பொலிவு, புலனடக்கம் ஞானச்சிறப்பு, அருட்சிறப்பு ஆகியவற்றை உள்ளம் உருகப்பாடி அருள் வேண்டும் தன்மையில் பாடியுள்ளார்.

தெலுங்சில் பால்குறிக்கி சோமநாதர் விருஷாதிப சதகத்தை இயற்றினார். வீரசைவசமயத்தைத் தோற்றுவித்தவரான பச வன்னாவை இறைவனின் அவதாரமாகக் கருதியதால் அவரை ஆண்டானாக, தோழனாக, தலைவனாக, யாவுமாக எண்ணிப் பாடிய பாடல்கள் விருஷாதிப சதகத்தில் இடம்பெற்றுள்ளன. பச வேசுவரரின் பெருமைகள் மட்டுமன்றிப் பிற சிவபக்தர்களைப் பற்றியும் இவர் பாடியுள்ளார். காழ்ப்புணர்வினால் பிற சமயங்க ளைத் தூற்றுவதையும் இந்நூலில் காணலாம். கவித்திறனும் ஓசை நயமும் மிகுந்து காணப்படுவதால், இச்சதகம் நித்திய பாராயணம் செய்யும் வகையில் அமைந்துள்ளது.

**நீதிச் சதகங்கள் :**

மக்கள் மக்களாக வாழவேண்டிய நீதி நெறிகளை எடுத் துரைப்பன நீதிச்சதங்களாகும். இந்நீதிச் சதகங்களில் எந்நாட்

டினரும் எம்மொழியினரும் எக்காலத்திலும் ஏற்றுக்கொள்ளத்தக்க உலகப்பொதுநீதிகளும் சமூகத்தில் வாழும் மக்களுக்குரிய சமுதாய நீதிகளும், தனிமனித ஒழுகலாறுகளும் வலியுறுத்தப் பட்டுள்ளன. சதகப் புலவர்கள் மக்களுக்கு உரைக்க வேண்டிய நீதிநெறிகளை நேரடியாகக் கூறாது யாதேனும் ஒரு தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனை முன்னிலைப் படுத்திக் கூறுவதாகப் பாடியுள்ளார்கள்.

தமிழில் அம்பலவாணக் கவிராயர் அறப்பள்ளி என்ற தலத்தில் வீற்றிருக்கும் அறப்பளீசுவரக் கடவுளை முன்னிலைப்படுத்தி நன்மக்கட்பேறு, உடன்பிறப்பு, கற்புடைய பெண்டிர் போன்ற நீதிநெறிகளை விளக்கியுள்ளார். மேலும், கோயில் இல்லாத ஊர், நாசியில்லாத முகம், கொழுநன் இல்லாத மடவார், மணம் வீசாத மலர், குஞ்சரம் இல்லாத சேனை, காவல் இல்லாத பயிர், பாலர் இல்லாதமனை, மதியில்லாத விண், கவிஞர் இல்லாத சபை இவைகளால் நன்மைகள் ஏதும் இல்லை என்று கூறியுள்ளார்.

சோழநாட்டுத் திருப்புல் வயலில் அருள் செய்யும் குமரக் கடவுளை முன்னிலைப் படுத்திப் பாடப்பட்டது குமரேச சதகமாகும். குருபாததாசர் இந்நூலில் மக்கள் மானத்துடன் வாழ வேண்டும், அறஞ் செய்தல் வேண்டும், உண்மை பேச வேண்டும். அடைக்கலம் காத்தல் வேண்டும் என்பது போன்ற நீதி நெறிகளை எடுத்துரைத்துள்ளார். படிக்காசுப் புலவர் பழமொழி விளக்கம் என்னும் தண்டலையார் சதகத்தில் ஒவ்வொரு பாடலிலும் பல நீதி நெறிகளை எடுத்துக்கூறி, இறுதியடியில் அதற்கேற்ற பழமொழியையும் இடம்பெறச் செய்துள்ளார். சான்றாக,

''வன்மவினை செயல் வேண்டாம் பொய் வேண்டாம்
பிறரை யொன்றும் வருத்தல் வேண்டாம்
கன்ம நெறி வரல் வேண்டாம் வேண்டுவது
பலர்க்கும் உபகாரமாம்
நன்மை செய்தார் நலம் பெறுவர் தீமை செய்தார்
தீமை பெற்று நலிவர் தாமே"

என்ற பாடலில் செய்யக் கூடாத செயல்களும், செய்ய வேண்டிய செயலும் மக்கள் அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தும் பழ

மொழியின் மூலம் விளக்கம் பெற்றுள்ளன. இவ்வாறே, கோவிந்த சதகத்திலும் பழமொழிகளின் வாயிலாகவே நீதிநெறிகள் விளக்கப் பட்டுள்ளன.

தெலுங்கில் காலத்தால் முந்திய நூல்களையும், உலக அனுபவங்களையும் அடிப்படையாகக் கொண்டு மக்களுக்குப் பயன்படும் வகையில் நீதிச் சதகங்கள் பாடப்பட்டுள்ளன. மக்கள் பின்பற்ற வேண்டிய நேறிமுறைகள் விளக்கப் பட்டுள்ளன.

தெலுங்கில் புகழ்பெற்ற நீதச் சதகங்களுள் காலத்தால் பழமை உடையது சுமதி சதகம். பெத்தனா எழுதிய இச்சதகத்தில் அரசுநீதி, இல்லறநீதி, உலகநீதி ஆகியன உணர்த்தப்பட்டுள்ளன. ஆபத்திற்கு உதவாத உறவினர்கள், வேண்டிய வரத்தை நல்காத தெய்வம், போர் முனையில் தான் ஏறியபோது ஓடாத குதிரை இவைகளை உடனடியாக விட்டுவிட வேண்டும் என்று மக்களை எச்சரித்துள்ளார் பெத்தனா. இது போலவே பொருள் நிறைந்த காலத்தில் உறவினர் சூழ்ந்திருப்பர்; பொருளற்ற காலத்தில் விலகிச் செல்வர் என்பதை,

''நிறை பொருள் பெற்றே வாழ்ந்திடும் நாளில்
உறவெலாம் விரைந்தே உனைவந்து சேரும்
நிறைகுளம் நாடியே நுணல்பல கோடி
விரைவது போலவே - விவேகி நீ அறிவாய்''

என்று உவமையின் மூலம் தெளிவுபடுத்தியுள்ளார். இப்பாடலின் மூலம் எப்பொழுதும் நிலைத்து நிற்கும் உண்மையான உறவுகளையே தேடிக்கொள்ள வெண்டும் என்ற கருத்து வலியுறுத்தப் பட்டுள்ளது. கி.பி !7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வேமனா மக்களின் அன்றாட அனுபவத்திலுள்ள உவமைகளின் மூலம் அரிய நீதிக் கருத்துக்களை எளிய பேச்சு மொழியில் எடுத்துரைத்துள்ளார். சாதிவேறுபாடுகளையும், சமுதாயத்தில் பரவலாகக் காணப்பட்ட மூடநம்பிக்கைகளையும் தம்பாடல்களில் கடுமையாகச் சாடியுள்ளார். இல்லற வாழ்வில் அமைதி நிலவ வேண்டும்; இல்லையேல் வாழ்க்கை என்பது பெரும் போராட்டமாகி விடும் என்பதை வேமனா,

''செருப்பிடைப் பரல் செவினுள் குளவி
கண்ணிடைத் தூசி காலில் குத்திய முள் - போல்
வீட்டிற்குள் போர் நடக்கின்றது. இல்லையா
உலகத்தால் விரும்பப்படுகின்ற வேமா கேளடா''

என்ற பாடலில் உவமைகளின் வாயிலாக விளக்கியுள்ளார் இதனால் மக்களிடையே சண்டைகள், உட்பூசல்கள் ஏற்படுதல் கூடாது என்ற நீதியும் வலியுறுத்தப்பட்டுள்ளது.

மாரய்யா வெங்கையா பாடிய பாஸ்கர சதகத்தில் ஒவ்வொரு பாடலிலும் ஒரு நீதிக்கருத்தும் அதைத் தொடர்ந்து உலகியல் செய்தியும் உரைக்கப்பட்டுள்ளன. இவைகளைத்தவிர குமாரீசதகம், குமாரசதகம், குமதீசதகம் கிறிஸ்துவநீதிசதகம் போன்றவைகளும் குறிப்பிடத்தக்க புகழ்பெற்ற நீதிச்சதகங்களாகும்.

(தொடரும்)





# வீராநாய்க்கர் தினசரிதை

(ஓர்சே மா.கோவலங்கண்ணன்,
பிரான்சு
திருமதி சுந்தரி கோவலங்கண்ணன் )

முன்னுரை

புதுவை மக்கள் அனைவரும் தமிழ் ஆராய்ச்சியாளர்களும் ஆனந்தரங்கப்பிள்ளையின் தினசரிதையை நன்கு அறிவார்கள். அதைவிட மிகச் சிறியதாக இருப்பினும், அதே முக்கியத்துவம் படைத்தமுறையில் அமைந்திருக்கும் இன்னொரு தினசரிதையும் உள்ளது. இது கி.பி.1761இல் முடிகின்ற ஆனந்தரங்கப்பிள்ளையின் தினசரிதைக்கு ஏறக்குறைய தொடர்ச்சி போல் அமைந்திருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். மேலும், இவ்விரண்டாவது தினசரிதை யின் வாயிலாக, புதுச்சேரியில் இன்னொரு வரலாற்றுளம் படைத்த பண்பாளர் வாழ்ந்ததும் புலனாகின்றது.

பல ஆண்டுகளாக நாம் செய்துவரும் ஆராய்ச்சியின், பலனாக, 1988 அக்டோபரில் பாரிசிலுள்ள தேசிய நூலகத்தில் (Bibliotheque Nationale) இந்த எழுத்துப் பிரதியைக் கண்டுபிடிக்கும் நல்வாய்ப்பு ஏற்பட்டது. பிரெஞ்சு அதிபர் எதுவார் அரியேல் (Edouard Ariel 1818-1854)அவர்களின் எழுத்துப் பிரதிகள் மற்றும் தாள்களினூடே, 18ஆம் நூற்றாண்டின் இரண்டாவதுபாதி, புதுவை வரலாற்றை அறிவிக்கக்கூடிய முக்கியமான கருவூலமாக ''வீரா நாய்க்கர் தினசரிதை'' என்ற தலைப்பில் பல குறிப்புத்தாள்கள் கிடைத்தன. இந்தக் கருத்தையும் காலத்தையும் சித்திரிக்கும் சில பிரெஞ்சு நூல்கள் இருப்பினும், புதுவைவாழ் தமிழரே அந்நகரத்தில், கி.பி. 1778-1792-இல் நடந்த சம்பவங்களைச் சொல்லி, எழுதும் விதத்தைக் காண அவா உள்ளவர்களுக்கு இப்பிரதி அமுதமாயிருக்கும் எனபதில் சந்தேகமில்லை. எதுவார் அரியேல் கி.பி. 1850-ஆம் ஆண்டு வாக்கில் தமக்குக் கிடைத்த முதல் பிரதியைப் படியெடுக்க வைத்து, அதை நம்பகமானதென்று கையொப்பமிட்டு வைத்திருக்கின்றார்.

தீவினைப்பயனாய் இதுகாறும் தினசரிதை ஆசிரியரின் வாழ்க்கையைப் பற்றிய குறிப்பொன்றும் கிடைக்கவில்லை. இப்பொழுது நாம் செய்யும் அறிவிப்புக்குப் பிறகு சில ஆண்டுகளில் வேறு பல தகவல்கள் இவரைப் பற்றிக் கிடைக்கலாம் என்று நம்புகிறோம்.

## II தினசரிதை

கடைசி ஆண்டுகள் நீங்கலாக, ஆனந்தரங்கப்பிள்ளை வாழ்ந்தகாலம் புதுச்சேரியின் பொற்காலமாகத் திகழ்ந்ததெனலாம். அரசியல் முறையில் அப்போது தென்னிந்தியா முழுவதற்கும் இதுவே முதல் முக்கிய நகரமாக விளங்கியது. ஆனால் கி. பி. 1760ஆம் ஆண்டு ஆங்கிலேயரின் நீண்ட முற்றுகை காரணமாக அவர்களிடம் சரணடைந்த பின், கோட்டையும் ஊரும் அழிக்கப் பட்டன. அப்பொழுது ஆங்கிலேயர் உள்பட எவருமே மீண்டும் புதுவை நகரம் உயிர்பெற்றெழுந்து மேலும் பல வரலாற்றுச் சம்பவங்களுக்கு மேடையாக இருக்குமென்று எதிர்ப்பார்த்திருக்க மாட்டார்கள். ஆனால் 1778 சூன் 25-லிருந்து 1792 சூலை வரை நடந்த முக்கியமான அரசியல், பொருளாதார, சமூக விவகாரங் களைத் தெள்ளுதமிழில் எழுதியிருக்கிறார் வீராநாய்க்கர்.

நான் கண்ட படியில் சுமார் 324 பக்கங்கள் உள்ளன. இத்தினசரிதையை 4 முக்கிய அத்தியாயங்களாகப் பிரிக்கலாம் :

கி.பி. 1778 : புதுச்சேரியின் எதிர்ப்பு (சுமார் 60 பக்கங்கள்)

" 1778-1785 : ஆங்கிலேயர் ஆதிக்கம் (சுமார் 80 பக்கங்கள்)

" 1785-1790 : பழைய ஆட்சியின் கடைசி ஆண்டுகள் (சுமார் 100 பக்கங்கள்)

" 1790-1792 : புதுச்சேரியில் புரட்சி (சுமார் 80 பக்கங்கள்)

### புதுச்சேரியின் எதிர்ப்பு

வீராநாய்க்கரின் தினசரிதை "ஐரோப்பா" என்ற சொல் லால் தொடங்குகிறது. ஐரோப்பாவில் உள்ள நாடுகளைப் போன்ற நாகரிகம் படைத்த நாடுகளுக்கிடையே சமாதான காலங் களில் கண்ணியமான தொடர்பு முறை இருக்க வேண்டும் என்பதை

முதலில் அவர் நினைவுபடுத்துகின்றார். தூரத்திலுள்ள ஐரோப்பிய தலைநகரங்களிலிருந்து செய்திகள் வரச் சுமார் 6-8 மாதங்கள் பிடித்தன ; ஆதலால், தவறான, குழப்பமான வதந்திகள் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்குமிடையே நிலவி வந்த துல்லிய உறவை எளிதில் ஆட்டங்காண வைக்கக் கூடியதாக இருந்தன. ஆங்கிலேயக் கப்பல்களும் கொண்டு வரும் செய்திகளை மிக்க ஆவலுடன் புதுச்சேரி மக்கள் எதிர்ப்பார்த்துக் கொண்டிருந்தனர்.

முதலில், ஐரோப்பா கண்டத்தில் இங்கிலாந்துக்கும் பிரான்சுக்குமிடையே சண்டை தொடங்கி விட்டது என்ற செய்தி வருகின்றது; அடுத்த செய்தியோ முத்தியதை மறுக்கின்றது. பிறகு மீண்டும் சண்டை மூண்டுவிட்டது என்று நிச்சயமாகத் தெரியவருகின்றது. கடந்த சீரழிவிலிருந்து சிறிது சிறிதாக உயிர் பெற்றுவரும் புதுச்சேரிக்கு ஆங்கிலேயரின் தாக்குதலை எதிர்ப்பதற்கான முயற்சி செய்வதா, பொருள் செலவிடுவதாவென்று தெரியாமல் இருக்கின்றது. வீணே, ஆங்கிலேயர் சந்தேகப்படும் விதத்திலோ நம்பிக்கைத் துரோகமென எண்ணக்கூடிய விதத்திலோ ஒரு காரியத்தையும் செய்யவொண்ணாத ஆளுநர் தெ பெலுக்கோம்பின் (de Bellecombe) தயக்கத்தை ஆசிரியர் நன்கு விளக்குகின்றார்.

கடைசியாக, புதுச்சேரிக் கரையோரத்தில் பல சண்டைகள் நிகழ்ந்து, கரைக்கு எதிரே கடலிலும் பல கப்பல் மோதல்கள் ஏற்பட்டு, நான்கு மாத காலம் தைரியமாக எதிர்த்தபின் கி.பி. 1778 அக்டோபர் 17ஆம் நாளன்று ஆங்கிலேயப் படை தளபதி மன்றோ (Munroe)-விடம் சரணடைந்தது.

### ஆங்கிலேயர் ஆதிக்கம்

புதுவை சரணுக்குப் பின் நடந்தது பற்றித் தினசரிதையில் ஒன்றுமில்லை. புதுச்சேரி மக்களுக்கும் தமக்கும் ஏற்பட்ட விதியைப் பற்றி ஆசிரியர் யாதொன்றும் கூறவில்லையாயினும், இந்தத் தோல்வி அவருக்கு மிகுந்த வருத்தத்தைக் கொடுத்திருக்க வேண்டும் என்பது தெளிவு.

இந்த இரண்டாம் அத்தியாயம் கி.பி. 1779 மே மாதம் தொடங்கி, மீண்டும் பிரெஞ்சு அதிகாரத்திடம் புதுவை ஒப்படைக்

கப்பட்ட நாளன்று அதாவது கி.பி. 1785 பிப்ரவரி 1- முடிவு பெறு கின்றது. பாரிசு உடன்படிக்கையின் விவரங்களைப் பற்றி முன் னமே இரு தரப்பாரும் அறிந்திருப்பினும், இலங்கையில் பிரெஞ்சுக் காரர் வசமிருந்த திரிகோணமலையைத் தங்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்ற வேண்டுகோளுடன் புதுவையின் நிலையை இணைத்து ஆங்கிலேயர் காலதாமதம் செய்து வந்தனர்.

ஐதர் அலியின் மறைவுக்குப் பிறகு கி.பி. 1782 திப்புசுல் தானின் நட்பைப் பெற பிரெஞ்சுக்காரர்கள் செய்த முயற்சிகளை யும் கப்பல் சண்டை வெற்றிக்குப்பின் பறங்கிப்பேட்டை, கடலூர் வழியாக புதுவைக்கு வந்த மர்க்கி தெ புய்சி (Marquis de BUSSY)-க்கு அவ்வூரார் கொடுத்த பெரிய வரவேற்பையும், அவர் ஆங்கிலேயருடன் நடத்திய ஒப்பந்தப் பேச்சு வார்த்தைகளையும் இவ்வத்தியாயத்தில் அறிய முடிகின்றது. தீவினைப் பயனாக புதுச் சேரியின் விடுதலைக்குச் சிறிது முன்பு மர்க்கி தெ புய்சி மரண மடைந்தார்.

பழைய ஆட்சியின் கடைசி ஆண்டுகள்

ஆசிரியரின் மனநிலையை நன்கு உணர்த்தும், சிறிது மந்தமான, 2-ஆம் அத்தியாயத்துக்குப் பின் புதிய நம்பிக்கை களுடன் புதுச்சேரியின் கதை தொடர்கின்றது, ஆனால், அவை வீண் நம்பிக்கைகளாகவே மாறிவிடுகின்றன.

புதுச்சேரியின் வெள்ளைக் கொடி கி.பி. 1785 பிப்ரவரி முதல் தேதியன்று ஏற்றப்படுகின்றது. அதை வீராநாய்க்கர் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றார்: ''மங்களவாரம் சுவாதி நட்சத்திரம் இரிஷப லக்கனம் மணி 12 - இச்சுபதினத்தில் புதுவை நகரப்பட்டணத்தில் வெள்ளைக்கொடியேற்றினார்கள்.''

வில்லவநல்லூர் பாகூர்ப் பிரதிநிதிகள் அப்போது தற் காலிகப் பெரிய அதிகாரியாக இருந்த குத்தான்சோ (Coutenceau) என்றவருக்கு தமிழ் முறைப்படி - அதாவது பொற்காசுகள், பட்டா டைகள், வெற்றிலை கொண்ட வரிசையுடன் - மரியாதை செலுத் தினார்கள்.

ஆனால், ஒருவருக்குப்பின் ஒருவராக வந்த பல ஆளுநர் கள் புதுச்சேரியில் நீண்ட காலம் பதவியில் இருக்கவில்லை.

அவர்களுடைய முயற்சிகளும் அந்நகரத்துக்குத் தேவையான நற்பலன்களைத் தரவில்லை. தலைமையதிகாரம் ஈல் தெ பிரான்சு (Ile de France) என்னும் மொரிசியசு தீவுக்கு (அப்போது அது பிரெஞ்சுக்காரர்கள் வசமிருந்தது) மாற்றப்பட்டது. புதுச்சேரி மக்கள் மன்றாடிக் கேட்டுக்கொண்டும், அவர்களின் வேண்டுகோளுக்கிணங்காமல் அங்கிருந்த பிரெஞ்சுப்படை சிறிது சிறிதாக அத்தீவுக்குக் கொண்டு போகப்பட்டது. வீரா நாய்க்கர் அவ்வப்போது புதுவைத்துறை வந்து போகும் கப்பல்களைப் பற்றிய விவரங்களைக் குறிப்பிடுகின்றார். இவ்வகையில், ஒருமுறை அத்ரான் மதகுரு (Bishop of Adran) சிறிய சீனா என்று சொல்லப்படும் கொசின் சீனாவின் இளவரசனுடன் புதுவை வழியாகச் சென்றதைக் குறிப்பிடுகின்றார். புதுச்சேரி மக்களின் வறுமை முற்றிக் கொண்டே போகின்றது.

புதுச்சேரியில் புரட்சி

''லா பியென்வெனுய்'' (La Bienvenue) என்ற கப்பலின் புதுச்சேரி வருகை பெரிய கலக்கத்தை உண்டுபண்ணுகிறது. சில வாரங்களுக்கு முன்பு ''லா வெசுதால்'' (La Vestale) என்ற கப்பல் சென்னையை அடைந்தபோது பிரெஞ்சுப் புரட்சியைப் பற்றி வந்த சில செய்திகள் மேலும் உறுதியாயின. கி.பி. 1789 சூலை மாதச் சம்பவங்கள் விவரமாகத் தெரிய வந்ததும், புதுச்சேரி மக்கள் சபைகூட்டத் தொடங்கினர். இப்புதிய சமூகவெழுச்சியில் தமிழர்களும் பங்கு கொள்வதற்குக் காட்டும் ஆர்வத்தை வீரா நாய்க்கர் எடுத்துக்காட்டுகின்றார்.

இந்த அத்தியாயத்தில் திருவேங்கடப்பிள்ளையின் மறைவு பற்றியும் அவருடைய மகனை ஆளுநர் ''தெ பிரென்'' (de Fresne) அவர்கள் ''மலபார்களின் தலைவர்'' ஆக, அதாவது, தமிழர்களின் தலைவராக நியமிக்கப்படுவது பற்றியும் காணலாம்.

தெ பிரென் முன்பிருந்த ஆளுநர்களைவிட அதிகமாக மக்களின் ஆதரவையும் நம்பிக்கையையும் பெற்றிருந்தார். பாரிசிலிருந்து தெளிவாக ஆணைகளோ, நடத்துமுறைகளோ தொடர்ந்து வராத நிலையில், புதுச்சேரி புரட்சியைச் செய்ய முடிந்ததற்கு அவருடைய மனவலிமையும், பெரு முயற்சியும் விவேகமுமே முக்கிய காரணங்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

கோந்து தெ சிவராக்கு (Comte de Civarac) என்பவர் தலைமையில் கூட்டப்பட்ட பிரதிநிதிக் குழு பற்றியும், புதுவை நகரசபை பற்றியும் திப்பு சிரீரங்கப்பட்டணத்தில் தோல்வியுற்ற செய்தியைப் பற்றியும் அரசியல்சட்ட விழா மற்றும் ஒருமைப்பாட்டு (Federation) விழா பற்றியும் வீராநாய்க்கர் மேற்கொண்டு எழுது கின்றார்.

கோந்து தெ சிவராக்கு கி.பி. 1792 சூலை மாதம் 16ஆம் தேதி (தம் 45ஆம் வயதில்) மரணமடைந்தார். மறுநாள், அவருடைய அடக்கத்தைப் பற்றிய குறிப்புகளுடன் இத்தினசரிதை முற்றுப் பெறுகின்றது.

பாரிசிலிருந்து புரட்சிக்கார மேலதிகாரிகளால் அனுப்பப் பட்ட லெசுகால்லியே (Lescallier) என்னும் அரசியலதிகாரி கி.பி. 1792ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் ''லொரியான்'' (Lorient. என்னும் கப்பலேறி, செப்டம்பர் மாதம் புதுவை வந்தடைகின் றார். வந்தபின், நல்ல வேளையாக மிக விரைவில், திசம்பர் மாதமே புதுவையில் இரண்டாவது பெரிய சபையை அமைக்கின் றார். புதுவைப்புரட்சி மேலும் ஏழு மாத காலமே நீடித்தது. ஏனெனில், கி.பி. 1793ஆம் ஆண்டு ஆகசுடு 23ஆம் தேதி இந் நகரம் மீண்டும் ஆங்கிலேயர் வசம் சென்று (சில காலம் தவிர) மாறாமல் கி.பி. 1815 வரை அவர்களுடைய ஆதிக்கத்தில் இருந் தது. இத்தினசரிதையில் புதுவைப் புரட்சியின் கடைசி ஆண்டைப் பற்றி ஒன்றுமில்லாதது வருந்தத்தக்கதே.

ஆக்கியோன்

இத்தினசரிதையிலோ மற்ற நூல்களிலோ இதுவரை வீரா நாய்க்கரைப் பற்றி நமக்கு எந்த விவரமும் கிடைத்திலது. ஆகவே, அவருடைய வாழ்க்கையைப் பற்றிச் சிறிது கற்பனை செய்தே எழுத வேண்டியுள்ளது.

முதலில், தினசரிதை எழுதும் எண்ணம் அவருக்கு எவ்வாறு வந்தது? ஆனந்தரங்கப்பிள்ளை எழுதியிருந்ததும் அல்லது தம் காலத்தவராகிய திருவேங்கடப்பிள்ளை ஒன்று எழுதிவருவதும் அவருக்குத் தெரிந்திருக்கலாம். மாறாக, தமக்குத் தெரிந்த பிரெஞ்சுக்காரர்களிடமிருந்தே நேராகப் பார்த்து, தாமும் இவ் வழக்கத்தைக் கைக்கொண்டிருக்கலாம்.

வீராநாய்க்கர் தம் தினசரிதையிலே, தாம் ''கேட்ட சம்பவங்களும், கண்ணால் பார்த்த சம்பவங்களும், தாளில் படித்தறிந்த சம்பவங்களும் இதை எழுதுவதற்கு அடிகோலிகளாக இருந்தன வென்று குறிப்பிட்டிருக்கின்றார். இத்துணை அளவு விவரமாக அவர் எல்லாவற்றையும் எழுதுவதற்குப் புதிய சட்டசபைகளிலும் ஆலோசனைக் கூட்டங்களிலும் பேசப்படும் காரியம் பற்றிப் பிரெஞ்சு மேலதிகாரிகள் வெளியிடும் கருத்துக்களையும் அவர் நன்றாக அறிந்திருந்ததால், அவர் அப்பிரெஞ்சு அதிகாரிகளுடன் நெருங்கிய பணியாற்றியிருக்க வேண்டும் என்பது புலனாகின்றது. அக்காலத்தில் ''துவாசி'' என்று சொல்லப்பட்ட மொழி பெயர்ப்பாளர் வேலையில் அவர் இருந்தாராவென்பதை நிச்சயமாகக் கூற முடியாது. ஆங்கிலேயே 'கர்னல்' ஒருவருக்கு வீராசாமி நாயக்கர் என்பவர் துவாசியாக இருந்தார் என்பதும், திப்புசுல்தான் குதிரைக்காரன் ஒருவனால் அவர் வெட்டப்பட்டு இறந்தார் என்பதும் இத்தினசரிதையிலேயே அறியக் கிடப்பதை இங்கே நினைவுகூர வேண்டும்.

வீராநாயக்கர் தமிழ் மொழியை நன்றாக அறிந்திருந்தார். ஆங்கிலம், உருது, பாரசீகம், பிரெஞ்சு வார்த்தைகளைத் தமிழில் குறிப்பதற்குத் தயங்காவிட்டாலும், பலவிடங்களில் புதிய பிற மொழிச் சொற்களுக்குத் ''தூய தமிழ்ப் பதங்களை அவர் உபயோகிக்கும் திறன் பாராட்டத்தக்கது. உதாரணமாக, சாராயம் குடிக்கும் 'cup'-ஐக் ''குவளை'' என்றும், பிரெஞ்சுக்காரர் ஆடும் 'dance'-ஐக் ''கூத்து'' என்றும், National Assembly'-ஐச் ''சருவ சன சங்கம் என்றும் குறிப்பிடுகின்றார்.

ஆங்கிலேயரின் தந்திரக்குணத்தை அவர் அறிந்துள்ளார். பிரெஞ்சு மொழியை நன்கு கற்றுள்ள அவர் முழுதும் பிரெஞ்சு நாட்டவரை நம்பினார். பிரெஞ்சுக்காரரைப் பற்றி எழுதும், உபயோகிக்கும் தமிழ்நடையும் ஆங்கிலேயரைப் பற்றிக் குறிப்பிடும் போது உபயோகிக்கும் வேறு நடையுமே இதற்குத் தக்க சான்றுகளாகும். புதுச்சேரி ஆளுநர் தெ பெலுக்கோம்பின் அயராத முயற்சிகளை அவர் சித்திரிக்கும் விதமும், ஆளுநர் தெ பிரென் அல்லது புதுவை மேயர் கோந்து தெசிவராக்கு ஆகியவர்கள் எல்லாப்பிரெஞ்சுக்கார மக்களையும் தமிழ் மக்களையும் சேர்த்து வைக்கும் முயற்சிகளைத் தெளிவுபடுத்தும் விதமும் கூடுதல் நற்சான்றுகளாக அமைகின்றன.

அவரால் கி.பி, 1792 சூலை 17-க்குப் பின் தொடர முடிய வில்லையா, அவருக்கு மனமில்லையா என்பது தெளிவாகத் தெரிய வில்லை. ஓரளவு அனுபவ முதிர்ச்சி இருந்ததால், இத்தினசரி தையைத் தொடங்கும்போது அவருக்கு 30-35 வயதிருக்கலாம். அவர் புதுச்சேரியில் பிறந்திருப்பாரானால், முதலில் அவ்வூரின் பிரகாசமான "பொற்"காலத்தை (1750-1755) அறிந்திருந்து, பிறகு கி.பி. 1761-இல் மற்றப் புதுவையினரைப் போல அவரும் மிகவும் பாதிக்கப்பட்டுத் துன்பப்பட்டிருப்பார் என்றெண்ண இடமிருக்கின்றது.

அவருடைய வாழ்க்கையில் திடீர் மாற்றம் ஏதாவது ஏற்பட்டதா? அல்லது எதிர்பாராதவிதமாக அவருடைய பாதுகாப்பாளராக அல்லது எசமானாக இருந்த பிரெஞ்சுக்காரருக்கு (பெயர் தெரியவில்லை) ஏதாவது நேர்ந்ததா? இக்கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாது.

**சில கேள்விகள்**

வீராநாய்க்கரின் தினசரிதையைப் படிக்கும்போது புதுவையைச் சார்ந்த இடங்களைப் பற்றிப் பல பொதுவான கேள்விகள் எழுகின்றன.

- பிரசித்தி பெற்ற அரிக்கமேட்டுக்கு அருகில் இருக்கும் வீராம்பட்டணத்தின் பெயர், வீரன், பட்டணம் என்ற சொற்களிலிருந்து வருவதாக இருந்தால், இத்தினசரிதையின் ஆசிரியரின் பெயரும், வீராசாமிநாய்க்கர் என்ற (ஆங்கிலேய கர்னலின் துவாசியின்) பெயரும், இன்னும் இதுபோல் தென்பெண்ணையாற்றின் இருபக்கங்களிலும் இருக்கும் பகுதிகளால் இன்றளவும் வழக்கத்திலுள்ள மற்றப் பெயர்களும் ஒரே மூலத்திலிருந்து வருவனவாக ஏன் இருக்கக்கூடாது?

- வன்னியர் "சாதியைச்" சேர்ந்த நாய்க்கர்கள் சமயம் வாய்த்தபோது ஆங்கிலேய, பிரெஞ்சு அதிகாரிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்ததாகவும் காண்கின்றோம். அவர்களுடன் சேர்ந்து அரசியல் பணிகளை மேற்கொள்ளுவதற்கு அடிப்படைத் தேவையான பரந்த மனப்பான்மை ஐரோப்பிய மொழி அறிவு போன்ற குணங்கள் அந்நாய்க்கர்களிடம் இருந்தன. (அவர்க

ளுடைய கைபலமும் தமிழ்நாட்டில் சண்டை செய்து கொண்டு வந்த எல்லாத்தரப்பு ஐரோப்பியர்களுக்கும் அத்தியாவசியமாக இருந்தது). தமிழ்ச் சமூகத்தில் முன்னேற்றமடைய அத்தகைய முற்போக்குத் தமிழர்கள் எந்த வழியைப் பின்பற்றினர்? நவாபுகளின் கொடுமைகளிலிருந்தும், இந்து சமுதாய, சாதி அநீதியிலிருந்தும் விடுபட அவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகள் எவை? இத்தகைய பொதுப்படையான கேள்விகள் இத்தினசரிதையைத் தொடர்ந்து வாசிக்கும் பொழுது நம் மனத்தில் எழுந்த வண்ணம் இருக்கின்றன.

கடைசியாகப் பிரெஞ்சுப்புரட்சியின் இருநூறாவது நினைவாண்டைக் கொண்டாடும் இந்நேரத்தில் புதுச்சேரித் தமிழ் மக்கள் எப்படி அக்காலத்தில் புரட்சியில் பங்கு கொண்டனர் என்பதை இத்தினசரிதை விவரமாக உணர்த்துகின்றது. பிரெஞ்சுக்கார துரைகள், துரைசாணிகள், மற்றும் இராணுவப் படையினர், வணிகர் அனைவரும் புதுச்சேரியில் செய்த புரட்சிக்காரியங்களைப் பார்க்கினும் தமிழர்களுடைய எழுச்சி சிறிது குறைந்ததே. ஆனால் சுப்பிரமணிய பாரதியார், பாரதிதாசனார் வாயிலாக மட்டுமே புதுவையைப் பற்றியறிந்து வைத்திருக்கும் பலதமிழ் வரலாற்று ஆராச்சியாளர்களுக்கு இந்தப் புதுச்சேரித் தமிழரின் முதல் போராட்டம் அரும்பிய விதமும், பிறகு புரட்சியாக மாறிய முறையும் முக்கியமான சிந்தனைப் பொருளாகும்.

முடிவுரை

இத்தினசரிதை எழுதப்பட்ட கால கட்டத்தால், அக்காலத்திலிருந்த அரசு அதிகாரிகளைப் பற்றிக் கூறும் விவரங்களால், வீராநாய்க்கரின் படைப்பு புதுவை வரலாற்றில் கி.பி. 1778 1972இல் அரசியல், பொருளாதாரம், சமூகம் பற்றிய தகவல்களைக் கொடுக்கும் சிறப்புக் களஞ்சியமாக விளங்குகின்றது.

மேலும் கி.பி 18 ஆம் நூற்றாண்டில் தமிழ்மொழி எப்படி எழுதப்பட்டது, எம்மாதிரியான சொற்கள், எப்படிப்பட்ட நடை உபயோகிக்கப்பட்டன என்பதையறிய இச்சரிதை தமிழியல் ஆய்வாளர்களுக்கு மிகவும் உபயோகமாகவுள்ளது.

அன்றியும், பிரெஞ்சுக்காரருடன் ஏற்பட்ட தொடர்பாகப் பிற்காலத்தவர் அறிந்துணரும் வகையில் சில தமிழர் புதுச்சேரியில் இருந்தனர் என்றும் அறிய முடிகின்றது. தமிழர் (இந்தியர்கள் என்றும் பொதுவாகச் சொல்லலாம்) வரலாற்றுள்ளம் படைத்தவர்களல்லர் என்று கூறுபவர்களுக்கு மறுப்பாகவும் இது அமைகின்றது. பெரும்பாலும், வரலாற்றைக் கணிக்கத் தேவையான ஆதாரங்கள் இல்லாததற்குக் காரணங்கள் நம் நாட்டுத் தட்ப வெப்ப நிலையும், இயற்கைச் சேதங்களும், சில காலங்களில் சிலருடைய அறியாமையினால் ஏற்பட்ட அழிவும், சிலகாலங்களில் வேறு சிலர் அறிந்தே செய்த அழிவுச் செயலுமேயாம்.

நல்ல வேளையாக, புதுவையிலே 10 ஆண்டு காலம் (1844–1854) வாழ்ந்து, அவ்வூரில் தம் இளம்வயதிலேயே இறந்து போன பரந்த மனப்பான்மை கொண்ட பிரெஞ்சு அறிஞர் எதுவார் அரியேல் போன்றோர் சேர்த்து வைத்ததன் பயனாகப் பகுதி பகுதியாகச் சில வரலாற்றுச் சான்றுகள் கிடைக்கின்றன. அப்பிரெஞ்சு அறிஞர் நமது திருக்குறளைப் படித்தபின் தம் ஆசிரியரான எழேன் புயிர்னூப்பு (Eugene Burnouf)-க்கு 1848-இல் குதூகலமான கடிதமொன்று எழுதியதையும், 1852-இல் அதை அவர் பிரெஞ்சு மொழியாக்கம் செய்ததையும் இங்கே நாம் நினைவுகூர வேண்டும். அவர் ஆங்கில அறிஞர் எல்லீசு (Ellis) இளம்வயதில் மறைந்தது பற்றி இரங்கி எழுதும் விதமும், அவருடைய தமிழார்வத்தை நன்கு விளக்குகின்றது. ''எல்லீசு மேலும் வாழ்ந்திருந்தால் தமிழிலக்கியத்துக்கு எவ்வளவு அழகான கோவில் எழுப்பியிருப்பார் என்று குறிப்பிடுகின்றார். தமிழ்த் தாத்தா உ. வே சா. அவர்களுடைய பதிப்புகள் வெளிவருவதற்குப் பற்பல ஆண்டுகள் முன்பே எழுதப்பட்ட வார்த்தைகள் இவை. எனவே, நம் தமிழ் மொழியில் இவ்வளவு அருமையான வீரா நாய்க்கர் தினசரிதையைப் பாதுகாத்துத் தந்த பிரெஞ்சு அறிஞருக்குத் தமிழர் அனைவரும் மிகவும் கடமைப்பட்டிருக்கின்றனர்.





# நன்னூலும் முத்துவீரியமும்

(டாக்டர் பி.பெ. சுயம்பு)

## நன்னூல்

எழுத்து, சொல் ஆகிய இரண்டனையும் விளக்குவது நன்னூல்· இந்நூலாசிரியர் பவணந்தி முனிவர். இவர் கி.பி. 13-ஆம் நூற்றாண்டினர். இவர் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இலக்கணங்களையும் விரித்தோதினாரெனினும் நாளடைவில் பின் மூன்று இலக்கணப்பகுதிகள் கிடைக்கப்பெறாது ஒழிய, முன்னை இரண்டுமே எஞ்சின. இதனை,

''அரும்பொருள் ஐந்தையும் யாவரு முணரத்
தொகைவகை விரியில் தருகென ... ...
... ... .... ... .... ... ... ... ... ....
திருந்திய செங்கோல் சீய கங்கன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்''
.... ... .... ... ... ... ... ... ... ...

என்னும் நன்னூற் பாயிரப்பகுதி உணர்த்தும்.

## முத்துவீரியம்

இந்நூலாசிரியர் உறையூர் முத்துவீரப்ப உபாத்தியாயர்; கி.பி.19-ஆம் நூற்றாண்டினர்; சுப்பிரமணிய தேசிகர் வேண்டுதலை ஏற்று இந்நூலைச் செய்தார். இது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணத்தையும் தெரிவிக்கின்றது.

எழுத்தொடு சொற்பொரு ளியாப்பணி யைந்தும்
எளிதிற் புலப்பட இயற்றித் தருகென
... ... ... ... ... ... ... ... ... ...
முத்துவீ ரியமெனத் தற்பெயர் நிறீஇ
வகுத்தன னுறந்தை யகத்தெழுந் தருளிய
முத்து வீரமா முனிவனென் பவனே

இது முத்துவீரியத்தின் பாயிரப் பகுதி.

நூலமைப்பு

இரு நூல்களும் ஒவ்வொரு அதிகாரத்தையும் கடவுள் வாழ்த்தோடு தொடங்குகின்றன. அவ்வாழ்த்து 'நுதலிப் புகுதல்' என்னும் உத்திக்கு விளக்கமாக, 'இன்ன இலக்கணத்தை இயம் புகின்றேன்' என்று அமைந்துள்ளது. நன்னூல் அருக தேவனை யும் முத்துவீரியம் சிவபிரானையும் வாழ்த்துவதன்வழித் தத்தம் சமயச் சார்பினை உணர்த்துகின்றன.

இரு நூல்களிலும் ஆசிரிய நூற்பாக்கள் உள்ளன. நூற் பாக்கள் நன்னூலில் பலவடிகளைக் கொண்டு பெரிதாகவும் முத்து வீரியத்தில் சிறிதாகவும் காணப்படுகின்றன. தேவையான அளவுக் குத் தொல்காப்பிய நூற்பாக்கள் முன்னோர் மொழியாக நன்னூலில் எடுத்தாளப்பெற்றுள்ளன. முத்துவீரியம் எழுத்து. சொல் அதிகாரங்களில் தொல்காப்பியத்தைப் பெரிதும் ஏற்று, நன்னூலை ஆங்காங்குத் தழுவிச் செல்கின்றது. இதன் பொருள் அதிகாரச்செய்தி நம்பியகப் பொருள், புறப்பொருள் வெண்பா மாலை ஆகியவற்றைத் தழுவுகிறது. யாப்பதிகாரமும் அணியதி காரமும் முறையே யாப்பருங்கலக் காரிகையையும் தண்டியலங் காரத்தையும் தழுவி இலக்கணம் கூறுகின்றன. நன்னூல், முத்து வீரியம் ஆகிய இவ்விரு நூல்களின் கருத்துக்கள் இவற்றை முறையே வழிநூலாகவும் கருதவழி செய்கின்றன.

நன்னூலின் முற்பகுதி பாயிரவியலாகும். பொதுப்பாயிரமும் சிறப்புப் பாயிரமும் ஒரு நூலில் எவ்வாறு அமைதல் வேண்டும் என்பது இப்பகுதியில் விரித்துரைக்கப்படுகின்றது. இப்பாயிரச் செய்திகள் ஆசிரியர், மாணவர் என்னும் இருபாலரின பண்பு நலன்களையும், பாடப்பகுதியாகிய நூல்களின் திறத்தையும், கற்பித்தல் மற்றும் கற்கும் முறை பற்றியும் குறிப்புகளைத் தருவ தன்வழி, சிறந்த கல்வியியற் கோட்பாட்டுப் பெட்டகமாக விளங்கு கின்றன. இச்செய்திகள் தொல்காப்பியத்திலிருந்தும் உரையாசிரி யர் செய்திகளிலிருந்தும் திரட்டப்பெற்றவை. இத்தகைய செய்தி கள் முத்து வீரியத்தில் கூறப்படவில்லை.

அதிகார உட்பகுப்பு நன்னூலில் ஐந்தைந்தாகவும் முத்து வீரியத்தில் மும்மூன்றாகவும் இயல்களாக்கப்பட்டுள்ளது.

நன்னூல் (462 நூற்பாக்கள்)

- பாயிரம்
  - பொது (1-46)
  - சிறப்பு (47-55)
- எழுத்ததிகாரம் (56-257)
  - எழுத்தியல் (72)
  - பதவியல் (23)
  - உயிரீற்றுப் புணரியல் (53)
  - மெய்யீற்றுப் புணரியல் (36)
  - உருபு புணரியல் (18)
- சொல்லதிகாரம் (258—462)
  - பெயரியல் (62)
  - வினையியல் (32)
  - பொதுவியல் (68)
  - இடையியல் (22)
  - உரியியல் (21)

முத்துவீரியம் (1289 நூற்பாக்கள்)

- எழுத்ததிகாரம் (1-458)
  - எழுத்தியல் (115)
  - மொழியியல் (45)
  - புணரியல் (238)
- சொல்லதிகாரம் (459-768)
  - பெயரியல் (136)
  - வினையியல் (49)
  - ஒழிபியல் (126)
- பொருளதிகாரம் (769-862)
  - அகவொழுக்கவியல் (60)
  - களவொழுக்கவியல் (24)
  - கற்பொழுக்கவியல் (9)
- யாப்பதிகாரம் (863-1129)
  - உறுப்பியல் (39)
  - செய்யுளியல் (61)
  - ஒழிபியல் (167)
- அணியதிகாரம் (1130-1289)
  - சொல்லணியியல் (25)
  - பொருளணியியல் (104)
  - செய்யுளணியியல் (31)

செய்திப் பகுப்பு

சிறப்புப் பாயிரத்தில் குறிக்கப்பட்டுள்ளவாறே நன்னூற் செய்திகளைத் தொகை, வகை, விரி என்னும் முறையில் நிரற் படுத்திக் கூறுகின்றது.

மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
எழுத்து முதல்சார் பெனவிரு வகைத்தே (58)
உயிரும் உடம்புமா முப்பது முதலே (59)

எழுத்து — முதல், சார்பு — முப்பதுமுதல் — இவ்வாறு ஒவ்வொரு செய்தியும் இவ்வுத்தியைப் பின்பற்றிக் கூறப்படுகின்றது. இவ் வுத்தி முத்து வீரியத்தில் தெளிவாகப் பின்பற்றப்படவில்லை. தொல்காப்பியம் சிற்சில இடங்களில் தொகுத்துக் கூறுதலன்றி, ஆங்காங்கே செய்திகளையும் கலந்து கூறிச் செல்கின்றது. இத னைக் குறையாகக் கருதிய நன்னூல் செய்திகளை ஒருங்கிணைத் துத் தொகை, வகை, விரியாகக் கூறுகின்றது.

செய்திகளைக் கூறும்போது பலவற்றுக்குப் பொதுவான வற்றைத் தொகுத்துப் பொது விதியாகவும், வேறுபட்டு நிற்பவற் றைச் சிறப்புவிதியாகவும், ஒருநெறிப்படாவற்றைப் புறனடையாக வும் அமைத்து விதிகளை நன்னூல் கூறுகின்றது. இவற்றுள் புறனடைச் செய்திகள் இயல்தோறும் அமைக்கப்பெறும் முறை முத்து வீரியத்தில் இல்லை.

எழுத்ததிகாரம்

எழுத்திலக்கணத்தைப் பொறுத்த வரையில் நன்னூல் ஒரு சிறந்த திட்டத்தை (Scheme) அமைத்து, அதற்கேற்ப நிரலாகச் செய்திகளை எடுத்துரைக்கின்றது. இத்தகு திட்டம் அமைத்தற் கேற்ப நிரலாகச் செய்திகளை எடுத்துரைக்கின்றது. இத்தகு திட்டம் அமைத்தற்குரிய எண்ணம் இளம்பூரணர், அவிநயனார் ஆகியோரிடமிருந்து நன்னூலாருக்குக் கிடைத்திருக்கலாம்.

எண்பெயர் முறைபிறப் புருவ மாத்திரை
முதலீ றிடைநிலை போலி என்றா
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே (57)

எழுத்ததிகாரத்தை ஐந்து இயல்களாகக் கூறியபோதிலும், அவ் வைந்தில் கூறப்படும் செய்திகள் அனைத்தும் எண்முதல் போலி

ஈறானவை ஒரு பகுதியாகவும் அமையும் என்பதை மேற்கண்ட திட்ட நூற்பாவில் நன்னூல் குறிப்பிடுகின்றது. இம்மூன்று பகுதிகளும் முறையே எழுத்தியல், பதவியல், புணரியல் எனத்தகுவன. எனினும், புணர்ச்சியை மேலும் வகைப்படுத்திக் கூறும் பொழுது, உயிரீற்றுப் புணரியல், மெய்யீற்றுப் புணரியல், உருபுபுணரியல் என மூன்றாகப் பகுத்துக் கூறுகின்றது. திட்ட நூற்பாவில் நன்னூல் குறிப்பாக உணர்த்தும் முக்கூற்றுப் பகுப்புமுறையே முத்துவீரியத்தில் பின்பற்றப்படுகின்றது. எழுத்தியல், மொழியியல் புணரியல் என்பன அவை. இது போன்ற திட்டநூற்பா முத்து வீரியத்தில் இடம்பெறவில்லை.

எழுத்தியல்

எழுத்தியற் செய்திகள் ஒலியன்கள், பேச்சொலிகளின் பிறப்பு, ஒலியன்களின் வருகை, போலி (ஒலி உறழ்ச்சி) என்னும் முறையில் தொகுத்து விளக்கப்படுதல் இரு நூல்களிலும் காணப் படுகின்றது. 'மொழி முதற் காரணமாம் அணுத்திரளொலி எழுத்து,என்னும் எழுத்துப் பற்றிய விளக்கம், அந்நூல் ஒலிவடிவத்தையே எழுத்தின் முதன்மை வடிவமாகக் கருதுகின்றது என்பதை வெளிப்படுத்துகின்றது. 'அணுத்திரளொலி எழுத்து' என்னும் தொடர் பல ஒலிக் கூறுகளாலாய திரட்சியே ஒலியன் எனும் இக்கால மொழியியற் கருத்தினை நினைவிற்குக் கொண்டு வருகின்றது. சமணசமயச் சார்பு நூலாசிரியரை இவ்வாறு சிந்திக்கத் தூண்டியுள்ளது எனலாம். மேலும், இந்நூல் 'தொல்லை வடிவின எல்லா எழுத்தும்' (98) என்று எழுத்துக்கள் வரி வடிவம் பெறுதலாகிய இயல்பினையும் குறிப்பிடுகின்றது. இதன்வழி எழுத்து ஒலி, வரி எனும் இருவித வடிவங்களை உடையது என்பதை நன்னூல் சுட்டுகின்றது. முத்துவீரியம் நன்னூலினின்று வேறுபட்டு, வரி வடிவத்திற்கு முதன்மை தந்து, 'எழுதப் படுதலின் எழுத்து' (1) என விளக்குகின்றது. இக்கருத்து இதன் உயிளபெடை, சார் பெழுத்துக் கருத்துக்களால் வலிமை பெறுகின்றது. எழுத்து ஒலி வடிவம், வரிவடிவம் என்னும் இருவகை வடிவங்களையும் உடையது (2) என முத்துவீரியம் வெளிப்படக் கூறுகின்றது.

உயிர்மெய், ஆய்தம், உயிரளபெடை, ஒற்றளபெடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக்குறுக்கம், மகரக் குறுக்கம், ஆய்தக்குறுக்கம் என்னும் பத்தையும் நன்

னூல் (60) சார்பெழுத்து எனச் சுட்டுகின்றது. முதலெழுத்துக் களிலிருந்து தோன்றுதல், அவற்றைச் சார்ந்து இயங்குதல், அவற்றின் ஒலிக்குறுக்கம்-ஒலிநீட்சி எனும் ஒலிவேறுபாடு என்பவற்றின் அடிப்படையில் சார்பெழுத்தை இந்நூல் வரையறுக்கின்றது. இப்பத்துப் பற்றிய விளக்கம் முத்து வீரியத்தில் இடம் பெற்றுள்ள போதிலும், இந்நூல் உயிர்மெய், ஆய்தம் எனும் இரண்டனை மட்டுமே சார்பெழுத்து எனச் சுட்டுகின்றது. இதனால் தனி வரி வடிவங்களைப் பெற்றுள்ளவற்றை மட்டுமே இந்நூல் சார்பெழுத்தாகக் கருதுதல் புலனாகின்றது. வரிவடிவமே இந்நூலில் சார்பெழுத்தை வரையறுக்கின்றது.

நன்னூலின்படி உயிரளபெடையில் நெடிலே அளபெடுத்து மூன்று மாத்திரை ஒலிக்கும்; இனக்குறில் அளபெடையின் அடையாளமாக இடப்படும் (91, 99). ஆனால், முத்துவீரியமோ நெடிலும் குறிலும் சேர்ந்து அளபெழும் என்கிறது. இந்நூலின்படி, நெடில் மட்டுமின்றிக் குறிலும் சேர்ந்து அளபெழும். மேலும், இது ஓர் எழுத்தின் மாத்திரையளவு இரண்டுக்கு மேற்படாது என்பதையும் சுட்டுகிறது. ஒலி நீட்சி தேவையானால் தேவைக் கேற்ப நீட்டிக் கொள்ளலாம் எனக் கருதுகின்றது. இது தொல்காப்பிய நெறி. இலக்கியங்களில் குறில் அளபெடுத்ததற்குச் சான்றுகள் உள.

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை

இயற்கை, செயற்கை, இன்னிசை, சொல்லிசை, நெடில், குறில், ஒற்றளபு, எழுத்துப்பேறு என எட்டு வகையாக அளபெடையைக் கூறுகின்றது முத்துவீரியம். இது புதியது.

மெய்யெழுத்துக்களோடு யகரம் புணரும்போது இடையில் இகரம் தோன்றும் (206) எனக் கூறியபோதிலும், குற்றியலுகரத்தோடு யகரம் புணரும்போது தோன்றும் இகரத்தையும் 'மியா' என்னும் அசையிலுள்ள இகரத்தையும் மட்டுமே குற்றியலிகரம் (93) என நன்னூல் சுட்டுகின்றது. உண்மையில் மெய்யெழுத்தோடு யகரம் புணரும்போது வரும் இகரம் எல்லாம் குற்றியலிகரமே. குற்றியலிகரத்திலுள்ள உகரம் மறைய, வல்லொற்றோடு யகரம் புணர, இகரம் தோன்றுகிறது [நாடு + யாது > நாட் +

யாது > நாட் + இ + யாது > நாடியாது]. கேண்மியா, சென்மியா போன்ற படிவங்களின் பகுப்பு நிலை கேண்ம் + யா, சென்ம் + யா என்றும் ஆகும். கேண்ம், சென்ம் என்பன போன்ற செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்கள் முன்னிலையில் அமையா என்னும் முன்னோர் விதியை ஏற்றதால் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்கள், செய்யும் என்னும் வாய்பாட்டின் மகரத்தையும் யா எனும் அசையையும் சேர்த்துப் பிறழப் பிரித்து, மியா அசை எனக் கூறுகின்றன. இங்கும் மகர யாகரங்கட்கிடையே குற்றியலிகரம் வருகின்றது. இக் குற்றியலிகரம் யகரச் சார்பினால் மெய்யெழுத்துகளைத் தொடர்ந்து வந்து இகரத்தின் மாற்றொலியாகச் செயற்படுகின்றது.

முத்துவீரியம், 'யகரம் வருவழி இகரம் குறுகும்' என்று, யகரச் சார்பினால் தோன்றும் இகரம் யாவும் குற்றியலிகரமே எனக் கூறுகின்றது. இத்நூல் குற்றியலிகரம் என்பது யகரமாகிய ஒலியனால் கட்டுண்ட இகரத்தின் மற்றொலியாரும் என்பதைத் தெளிவு செய்கின்றது. ஆனாலும், நிலைமொழியீறு பற்றி இந் நூலில் சுட்டப்படவில்லை. மேலும், 'அசைச்சொல் மியாவின் இகரமும் அற்றே' (35) என்று கூறியதன் வழி முத்துவீரியமும் முந்திய இலக்கண நூல்களைப் போன்று, பிறழப் பிரித்தல் என்னும் குறையினை உடையதாகின்றது. முன்னைத் தமிழில் செய்யும் என் வாய்பாடு முன்னிலையில் அமையவில்லை; அதற்கேற்ப முந்தைய இலக்கண நூல்கள் விதி கூறின; ஆனால், இவ்வியல்பு மாறி, நாளடைவில் 'யா' அசையோடு சேர்ந்து முன்னிலையிலும் 'செய்யும்' வாய்ப்பாட்டுச் சொற்கள் அமையலாயின; முந்தைய இலக்கண நூல்களுக்கு முன்னுரிமை கொடுத்து இலக்கணம் கூறும் தமிழ் இலக்கண நூல்கள், பிந்தைய மொழி வளர்ச்சியைக் கருத்திற்கொள்ளாது விதிகளை அமைத்தன. அதன் விளைவே இத்தகைய பிறழ்பிரிப்பு வடிவங்கள் எனக்கூறுதல் இயலும். முந்தைய இலக்கண நூல்களை மதித்து அவற்றின் விதிகளைப் பின்பற்றும் நெறியினைத் தமிழ் இலக்கண நூல்களில் பரவலாகக் காணுதல் இயலும்.

மேல்லெழுத்துக்கள் மூக்கை இடமாகக்கொண்டு பிறக்கும் என நன்னூலும் (75) உச்சியில் பிறக்கும் என முத்துவீரியமும் (43) கூறி வேறுபடுகின்றன. இங்கு மூக்கு என்பது வல்லெழுத்

துக்களுக்குரிய முயற்சியோடு வாயில் பிறக்கும் மெல்லெழுத்துக்கள், மூக்கில் மென்மையாகிய ஒலியூக்கம் பெறுதலை உணர்த்துகின்றது எனலாம். இது அறிவியலைச் சார்ந்தது. ஆனால் வாயில் சிறத்தலை மட்டுமே சிறப்பாகக் கருதும் முத்துவீரியம், மெல்லெழுத்துக்கள் ஒலியூக்கம் பெறுதலைக் கூறவில்லை.

ஆய்தம் வாயில் அங்காப்பு முயற்சியோடு பிறக்கும் என்பது நன்னூற் (87) கருத்து. அது உந்தியில் அங்காப்போடு பிறக்கும் என்பது முத்துவீரியம். மிகுந்த காற்றழுத்தோடு உரசொலியாக ஆய்தம் ஒலிப்பதையே 'உந்தி' என முத்துவீரியம் குறிப்பிடுகினறது. மூச்சுக் காற்று உந்தி விதானத்தால் மேல் நோக்கித் தள்ளப்படுவதைக் கருத்திற் கொண்டு, இக்கருத்துத் தோன்றியிருத்தல் வேண்டும். இரு கருத்துக்களுமே ஏற்புடைய வல்ல; ஆய்தம் தொண்டையில் பிறக்கும் உரசொலியாகும்.

'உ ஊ காரம் நவ்வொடு நவிலா' என்னும் தொல்காப்பிய நூற்பாவை (74) '... ... நவ்வொடு நவிலா' எனப் பிறழக் கொண்டு உரையாசிரியர்கள் உரை எழுதினர். அவருரை தமிழ்மொழி வழக்கிற்குப் பொருந்தவில்லை. 'நவ்வொடு' என்பதிலுள்ள புள்ளி காலப்போக்கில் ஏடு பெயர்த்து எழுதியோரால் விடப்பட்டுள்ளமையினை உணர்த்த முத்துவீரியம் (87) உ, ஊ ஆகியன நகரத்தோடு சேர்த்து சொல்லீற்றில் வருதல் இல்லை எனக் கூறுகின்றது. இது தொல்காப்பிய நூற்பாவிற்கு நல்ல விளக்கமாகும்.

ஞ், ந் என்பனவும் சொல்லீற்றில் வருதலை நன்னூல் (107) கூறுகின்றது. இவ்விதியை உடன்படுகின்ற முத்துவீரியம் (90) இவ்விரு எழுத்துக்களையும் ஈறாகக் கொண்ட சொல் ஒன்று மட்டுமே மொழி வழக்கில் உளது என்னும் சிறப்புச் செய்தியையும் சேர்த்துக் கூறுகின்றது. தொல்காப்பியம் ஞகரம் ஒரு சொல்லிலும் (80) நகரம் இருசொற்களிலும் மட்டுமே (79) ஈறாக அமையும் எனச் சுட்டுகின்றது. பிற்கால வழக்கில் இவை அறவே மறைந்து போனமையால் வீரசோழியம் ஞகரமும் நகரமும் சொல்லீற்றில் வருதலைக் குறிப்பிடவில்லை. ஆனால் வழக்கில் பயிலாத சொற்களை இவ்விரு நூற்களும் விதிகளில் சுட்டுகின்றன. அஃதாவது, மறைந்த மொழிவழக்கிற்கு உயிரூட்டுதல்

என்னும் குற்றமுடையதாகின்றது. மேலும் முத்துவீரியம் புணரியலில்,

'உகரச் சாரியை யொடுவரும் நகாரம்' (299)
'வேற்றுமைக் கண்ண கரத்தொடு சிவணும்' (300)
'வெரிந்ஈ றழிந்துமெல் லினமிகும் என்ப' (301)

என நகர வீற்றுச் சொற்புணர்ச்சிக்கு இலக்கணம் கூறுகிறது. இங்கு 299, 300 ஆகிய இரு விதிகளும் நகர வீற்றுச் சொற்களுக்குரிய பொது விதி. விதி 301 வெரிந் எனும் நகரவீற்றுச் சொல்லுக்கு மட்டுமே உரிய சிறப்பு விதி. ஒரே ஒரு சொல்மட்டுமே நகர வீற்றில் உளதாயின் பொதுவிதி, சிறப்பு விதி என விதந்து கூறுதலும், வெரிந் என்று ஒரு சொல்லை எடுத்து மொழிதலும் தேவையில்லை. எனவே, இப்புணர்ச்சி விதிகளின்படி ஒன்றுக்கு மேற்பட்ட சொற்கள் நகரவீற்றில் வழக்கில் இருந்தன என்பது தெரிய வருகின்றது. இக்கூற்று எழுத்தியல் விதிக்கு முரணானது. தொல்காப்பிய நெறியை மீண்டும் ஆட்சிக்குக் கொண்டு வருதல் வேண்டும் என்னும் வேட்கையே இக்குறைபாட்டிற்குக் காரணம்.

ஒலியன் வருகை பற்றிய செய்திகள் நன்னூலில் முதனிலை, இறுதிநிலை, இடைநிலை (மெய்ம்மயக்கம்) என்னும் முறையில் உள்ளன. ஆனால், முதனிலை, இடைநிலை, இறுதிநிலை என்னும் முறை முத்துவீரியத்தில் காணப்படுகின்றது. இம்முறை முதல்-இடை-இறுதி எனச் சொல்லில் ஒலியன்கள் அமையும் இடம் பற்றி உருவானதாகும். இச்சிறப்பு முறைவைப்பு மெய்ம்மயக்கம் தனிச் சொல்லில் அமைவதா, சொற்களுக்கிடையே அமைவதா என்னும் உரையாசிரியர்கள், மற்றும் இலக்கண, மொழியியல் அறிஞர்களின் ஆய்வுக்கு ஒரு சிறந்த தீர்வாக அமைந்துள்ளது. சொற்புணர்ச்சியில் ஒலியன்கள் ஒன்றையொன்று அடுத்து நிற்கும் செய்திகள் புணரியலில் கூறப்படுகின்றமையால், மெய்ம்மயக்கம் தனிச் சொல்லமைப்பிற்கு மட்டுமே உரியது என முத்துவீரியம் கருதுகின்றது.

## பதவியல்

நன்னூலின் சிறப்புக்களுள் ஒன்று பதவியல் ஆகும். தொடருக்கே சிறப்பிடம் கொடுத்து இலக்கணம் கூறுதலாகிய முந்தைத் தமிழ் மரபு வீரசோழியத்தில் பிறழ்ந்தது தொடரின் இடத்தைச்

சொல் பற்றியது. இதனால் சொல் பகுதி, விகுதி, இடைநிலை என உருபன் நிலையில் பகுத்து விளக்கப்பட்டது. அகராதிப் பொருளும் (பகுதி) இலக்கணப் பொருளும் தனித்தனியே இனம் சுட்டி விளக்கப்பட்டன. புதிதாக ஒரு மொழியைப் பயிலுவோருக்கு இந்நுண் பகுப்பு முறை விளக்கம் மிகுந்த பயனைத் தரவல்லது. தமிழகத்தில் புத்த மதக் கருத்துக்களைப் பரப்ப வந்த துறவிகள் தமிழை அறிந்து கொள்ளும் வகையில் வீரசோழியம் எழுதப் பட்டது. இதனால் அந்நூல் வடமொழி அமைப்புக்குச் சிறப் பிடம் கொடுத்துத் தமிழை வடமொழியோடு ஒப்பிட்டு இலக் கணம் கூறுகின்றது. இந்த இருமொழி ஒப்பீட்டு முறை அவ் விரு மொழியினரும் தத்தம் மொழியோடு மற்ற மொழியையும் எளிதில் பயிலத் துணை செய்கின்றது. மேலும், அந்நூல் தம்மொழியை நன்கும், மற்ற மொழியை ஓரளவும் அறிந்து கொண்ட புலவர்களுக்கென எழுதப்பட்ட நிலையில் காணப் படுகின்றது. எனவே, அந்நூல் தமிழ் இலக்கணத்தைத் தெளி வாகப் புரியும் வகையிலும், பகுப்பு முறையை முழுமையாகச் செய்தலும் இன்றிக் கூறிச் செல்கின்றது. சான்றாக, -தான், -தாள், -பாள் எனக் கால இடைநிலையினையும் பால் விகுதி யினையும் தனித்தனியே பிரிக்காமல் பகுத்துக்கூறுவதைக் குறிப் பிடலாம். இத்தகு குறைகள் நன்னூலில் களைந்தெறியப்பட்டுள் ளன. நன்னூல் தமிழ் மொழியமைப்பை மனத்திற் கொண்டு சொற்களைப் பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம் எனப் பகுத்து விளக்குகின்றது. இப் பகுபத உறுப்புக்களும் சந்தி யும் விகாரமும் புணர்ச்சியில் அமையும் ஒலி மாற்றங்கள். ஏனைய அனைத்தும் உருபன்கள். இவற்றுள் பகுதி அடிச்சொல்லையும் விகுதி, இடைநிலை, சாரியை என்பன சார்பு உருபன்களையும் சாரும். நன்னூலின் பதவியல் விளக்கங்கள் பெரிதும் இக்கால மொழியியல் கருத்துக்களை ஒத்தவை.

எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின்
பதமாம்; அதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி இயலும் என்ப (128)
தத்தம்
பகாப்ப தங்களே பகுதி ஆகும் (134)

ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட ஒலியன்களால் ஆகிய பொருள் உணர்த்தும் மிகச் சிறிய வடிவம் உருபன் எனப்படும்

என்னும் மொழியியலாரின் கருத்து நன்னூலின் பதம் பற்றிய விளக்கத்தை ஒத்துள்ளது. நன்னூல் பகுதிக்குத் தரும் விளக்கம் வேர்ச்சொல்லின் விளக்கத்தை நினைவூட்டுகின்றது. எனினும், நட (137), செம்மை, சிறுமை (135) போன்றவற்றையும் இந்நூல் பகுதி எனக் குறிப்பிடுவது அடிச்சொல்லையே பகுதி என்று சுட்டு கின்றது என்பதை வெளிக்காட்டுகின்றது.மேலும் நன்னூல் பண்புப் பகுதிகள் எனக் கருதும் செம்மை, சிறுமை போன்ற மையீற்றுச் சொற்கள் பகுதிகளல்ல; பகுதியோடு பண்பு விகுதி-மை சேர்ந்த பண்புப் பெயர்களாகும்.

பதவியலில் பதம், பதங்களின் வகை, ஓரெழுத்தொரு மொழி, தொடரெழுத்தொரு மொழி, பகுபத உறுப்புக்கள், பண்புப் பெயரில் ஏற்படும் சந்தி மாற்றம், காலஇடைநிலைகள் என்னும் தமிழ்ச் சொல்லமைப்பினையும் வடசொற்களைத் தமிழ்ப்படுத்தும் போது செய்ய வேண்டிய ஒலி மாற்றங்களையும் நான்கு நூற் பாக்களில் நன்னூல் கூறுகின்றது. முத்து வீரியத்தின் மொழி யியல் தலைப்பளவில் பதவியல் என்பதன் தமிழாக்கமாகும். கூறப்படும் செய்திகள் தமிழுக்குப் புதியனவும் வேறுபட்டனவு மாகும். இந்நூல் சொல்லுக்குத் தரும் விளக்கம் சிறப்பாக இல்லை; சொல்லின் புறவடிவத்தைக் கருத்திற் கொண்டு, 'சொன்ன எழுத் தினால் சொல்வதே சொல்' என விளக்கம் தருகிறது. இந்நூல் சொற்களைப் பகுத்துக் கூறும் முறைகளுள் ஓரெழுத்தொரு மொழி என்னும் எழுத்தெண்ணிக்கை பற்றி அமைந்த முறை நன்னூலைத் தழுவியது. நன்னூல் பகாப்தம் ஏழு வரையும் பகுபதம் ஒன்பது வரையுமான எழுத்துக்களை மிகுந்த அளவாகப் பெற்று அமை யும் எனச் சொல்லின் வடிவிற்கு எழுத்து வரையறை கூறுகின்றது. ஆனால் முத்து வீரியம் இவ்வரையறையினைப் பகாப்பதம், பகு பதம் எனப் பகுத்துச் சுட்டுதலின்றி, பொதுவாகச் சொற்கள் ஒன்பது எழுத்துக்களை மிகுந்த அளவாகக் கொண்டு அமையும் எனக் கூறுகின்றது.

சொல் பெயர், வினை என இரண்டு வகைப்படும் என்று பதவியலில் கூறும் முத்துவீரியம், பெயரியலில் இடையையும் உரியையும் சேர்த்துக் கொண்டு, தமிழ்ச் சொற்கள் நான்கு வகைப் படும் என்று கூறி, நான்கையும் தனித்தனியே விரிவாக விளக்கிச் செல்கின்றது. இந்த முரண்பாடு வடமொழி அமைப்பைக் கருத்திற் கொண்டு மொழியியற் செய்திகளைக் கூறுவதனால் உண்டான

தரும். வடசொற்களைத் தமிழ்ப்படுத்திக் கொள்வதற்குத் தமிழில் வழங்கும் விளக்கத்தினை (வடமொழியாக்கம்) இந்நூல் நன்னூலை விட விரிவாகத் (125-159) தருகின்றது. ஒரு மொழியியல் வேற்று மொழியினை எடுத்தாளும்போது, வேற்றுமொழியின் பெயர், வினை ஆகிய இருவகைச் சொற்களை மட்டுமே எடுத்தாளுதல் இயலும். இடைச்சொற்கள் மிக மிக அரிதாக இடம்பெறும். (—காரன், — காரி விகுதிகள் போல). இதனை உணர்த்தும் வகையில் பெயர், வினை எனச்சொல் இருவகைப்படும் என மொழியியலில் முத்துவீரியம் குறிப்பிடுகின்றது. தமிழில் இவ்விரு சொற்கள் மட்டுமே தனித்துச் செயற்படும்சொற்கள்; ஏனை இரண்டும் சார்புச் சொற்கள் என்பதும் குறிக்கத்தக்கது. தனிச்சொல்(நிலம், நீர் போல்வன), இணைச்சொல் (தேரன், ஊரன் போல்வன), துணைச் சொல் (மூவர், வந்தார் போல்வன), பொதுச் சொல் (நங்கை, வேங்கை போல்வன), கணச்சொல் (முனிவர்கள், தேவர்கள் போல்வன), தணச்சொல் (சந்திரன், இந்திரன் போல்வன), கலப்புறு சொல் (ஆண் பெண் போல்வன) எனும் சொற்பகுப்பு முறை சொல்லின் வருகையும் பற்றி மேற்கொள்ளப்பட்டதாகும். இப்பகுப்புமுறை தமிழ் எழுத்திலக்கணத்திற்குப் புதியது.

புணரியல்

புணர்ச்சி பற்றிய பொதுச் செய்திகளையும் உயிரீற்றுச் சொற்களோடு அமையும் புணர்ச்சியையும் உயிரீற்றுப் புணரியலில் நன்னூல் கூறுகிறது. தொல்காப்பியம் புணரியல், தொகை மரபு, உயிர்மயங்கியல் ஆகியவற்றில் சொன்ன கருத்துக்கள் யாவும் ஒருங்கிணைக்கப்பட்டு மிகச் சுருக்கமாக நன்னூலில் தரப்பட்டுள்ளன. தமிழ் இலக்கணக் கருத்துக்களைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்பது நன்னூலின் நோக்களுள் ஒன்று. பொதுச்செய்திகள் முதலில் கூறப்பட்டுத் தொடர்ந்து சிறப்புச் செய்திகள் அகரவீற்றுப் புணர்ச்சி, ஆகார வீற்றுப் புணர்ச்சி என எழுத்துவாரியாகத் தொகுத்து விவரிக்கப்படுகின்றன. இம்முறை வைப்பு இடையீடின்றி அகர வரிசையில் தொகுப்பும் சுருக்கமும் இயையும் கொண்டு சிறப்பாக அமைந்துளளது. தொல்காப்பியம் குற்றியலுகரத்தை உயிர்மெய் என்பவற்றினின்றும் வேறுபட்ட ஒலியாகக் கருதி, குற்றியலுகரப் புணரியல் என்னும் தனியியல் குற்றியலுகரப் புணர்ச்சிச் செய்திகளைத் தருகின்றது. அந்நூலில் புள்ளி மயங்கியலை அடுத்து

இச்செய்திகள் இடம் பெற்றுள்ளன. நன்னூல் குற்றியலுகரத்தை உகரத்தின் குறுக்கமாகக் கருதுகின்றமையால், உகரத்தின் மாற்றொலியாகக் கருதுகின்றமையால், உகரவீற்றுப் புணர்ச்சியில் முற்றுகரச் செய்தியைத் தொடர்ந்து சொல்கிறது. நன்னூலின் பொதுச் செய்திகள் புணரியலிலும் தொகைமரபிலும் தொல்காப்பியம் விரிவாகக் கூறியவற்றின் சுருக்குமாகும்.

ஏகார இடைச்சொல்லும் ஒகார இடைச்சொல்லும் ஒரே விதியினை ஏற்கின்றமையால், இரண்டும் தனிமைப்படுத்தப்படாமல், 'இடைச்சொல் ஏஓ முன்வரின் இயல்பே' (201) என ஒன்றின முடித்தல் என்னும் உத்திபட நன்னூலில் கூறப்பட்டுள்ளது. ஔகார ஈற்றுச் சொற்கள் அருகியமையால் ஔகார வீற்றுப் புணர்ச்சி நன்னூலில் கூறப்படவில்லை. கௌ, வௌ எனும் சொற்களும் ஔ எனும் குறிப்பிடைச்சொல்லுமாக மூன்று ஔகார வீற்றுச் சொற்களையே தொல்காப்பியம் சுட்டுகிறது. இச்சொற்கள் பிற்காலத்தில் கவ்வு, வவ்வு அல்லது கௌவு, வௌவு என உகர வீறுகளாயின. நன்னூல் இலக்கணத்தைச் சிறப்புச் செய்திகள் விடுபடாதவாறு சுருக்கமாகக் கூறுவதன்வழித் தொல்காப்பியத்தின் விரிந்த பகுதியைக் குறுக்கிவிட்டது. சான்றாக மரப்பெயர்ப்புணர்ச்சியைக் கூறலாம். தொல்காப்பியத்தின் புணர்ச்சிச் செய்திகளுள் மிக விரிவாகக் கூறப்பட்ட மரப்பெயர்ப் புணர்ச்சிகளை நன்னூல் பின்வரும் நூற்பாவில் குறிப்பிடுகின்றது.

மரப்பெயர் முன்னர் இனமெல் லெழுத்து
வரப்பெறு னவுமுள வேற்றுமை வழியே (166)

முத்துவீரியத்தில் புணரியற் செய்திகள் மிக விரிவாகத் தொல்காப்பியம் போன்று விவரிக்கப்படுகின்றன. தொல்காப்பியச் செய்திகள் மீண்டும் இடம்பெறுகின்றன. ஔகார வீற்றுச் சொற் புணர்ச்சி கூறப்படுகின்றது. மரப்பெயர்ப் புணர்ச்சி தொல்காப்பியத்தைப் பின்பற்றி, மரம் வாரியாக எடுத்துரைக்கப்படுகிறது. தொல்காப்பியத்தில் (313) உள்ள 'இல்லம்' என்னும் மரப்பெயர் முத்துவீரியத்தில் (314) 'இல்லாம்' என வடிவமாற்றம் பெற்று வருகின்றது. இச்சொல் நன்னூலில் இடம்பெறவில்லை. ழ் ட் ஒலிமாற்றம் வீரசோழியத்தைப் (18) பின்பற்றி முத்துவீரியத்திலும் (369, 370) இடம்பெற்றுள்ளது. இது நன்னூலில் இல்லாத ஒன்று.

பொதுச்செய்திகள், வேற்றுமை உருபுகள், சாரியைகளும் அவற்றின் வடிவமாற்றங்களும், உயிரீற்றுப் புணர்ச்சி, புள்ளியீற்றுப் புணர்ச்சி, குற்றியலுகரப் புணர்ச்சி எனும் முறையில் புணரியற் செய்திகள் முத்துவீரியத்தில் உள்ளன. குற்றியலுகரத்தை உகரத்தின் ஒலிக் குறுக்கமாகக் கருதியபோதிலும், அதனை உகர விதிகளோடு சேர்த்துக் கூறாமல் புள்ளியீற்றுப் புணர்ச்சியைத் தொடர்ந்து கூறுவது இந்நூல் தொல்காப்பிய நெறியைப் பின் பற்றுகிறது எனற்கு மேலும் ஒரு சான்றாகும். எனினும் கருத்துக்கும் முறைவைப்புக்கும் இடையே முரண்பாடுஉள்ளது. இத்தகு முரண்பாட்டினை நூலில் ஆங்காங்கே காணமுடிகின்றது. தொல்காப்பியம் தவறு படக் கூறியதை நன்னூல் திருத்தம் செய்திருப்பினும், முத்துவீரியம் அத்திருத்தத்தினை ஏற்காமல் மீண்டும் தொல்காப்பியத்தையே தழுவும்பாங்கு காணப்படுகின்றது. இத்தகு கட்சி சேரும் பாங்கு தொல்காப்பியக் கட்சி எனப் பிற்கால இலக்கண நூல்களிடையே பரவலாகக் காணக் கிடக்கின்றது. உயிரீற்றுப் புணர்ச்சிகளும் மெய்யீற்றுப் புணர்ச்சிகளும் எழுத்து வாரியாக முறைபடுத்தப்படும் தன்மை முத்துவீரியத்திலும் உளது.

நன்னூல் (224) கூறும் அ, கு என்னும் சாரிகைகளை முத்துவீரியம் (174) அக்கு, இக்கு என்று முறையே சுட்டுகின்றது. இந்நூல் தொல்காப்பியத்தைத் தழுவி இவற்றை அடிப்படை வடிவமாகக் கொண்டு, பின் அவை புணர்ச்சியில் முறையே அ, கு என வடிவ மாற்றம் பெறுகின்றன என விளக்குகின்றது. அ, கு என்னும் சாரிகைகளைத் தொல்காப்பியம் பிறழப் பிரித்துரைக்கிறது. முத்துவீரியமும் அதே தவற்றைச் செய்கின்றது. ஆனால் அற்றுச் சாரியை நன்னூலில் உள்ளது போலவே முத்துவீரியத்திலும் சுட்டப்படுகின்றது. இங்குத் தொல்காப்பியத்தின் வற்று ஏற்கப்படவில்லை. இந்நூலின் சீர்திருத்தத்தினை முத்துவீரியம் ஏற்றுக் கொண்ட மிகச்சிலவற்றுள் இதுவும் ஒன்று. மான் என்னும் சாரியை முத்துவீரியத்தின் புதிய செய்தி. கல்விமான், புத்திமான் போன்ற சொற்களைக் கருத்திற்கொண்டு இசசாரியை வந்துள்ளதுபோலும். இத்தகு சொற்களில் மான் சாரியை அன்று; சொல்லாக்க விகுதி ஆகும்.

**சொல்லதிகாரம் பெயரியல்**

சொல்லின் பொது இலக்கணம் கூறும் நூற்பா நன்னூலில் (259) முதற்கண் இடம்பெற்றுள்ளது. இதில் இடம் பெற்றுள்ள

முறையில் சொல்லிலக்கணக் கூறுகள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொகுத்துரைக்கப்படுகின்றன. ஒருமொழி, தொடர்மொழி, பாது மொழி எனும் மூவகை மொழிகள், உயர்திணை, அஃறிணை எனும் இரு திணைகள், ஐம்பால்கள், மூவிடம், இருவகை உலக வழக்கு (இயல்பு, தகுதி), செய்யுள் வழக்கு ஆகிய மொழி வழக்குகள், குறிப்பு, வெளிப்படை எனும் சொல் உணர்த்தும் நிலைகள் ஆகியவை நிரலாக விளக்கப்படுகின்றன. தொடர்ந்து இயற்சொல், திரிசொல், திசைசொல், வடசொல் என்னும் செய்யுட் சொற்கள் விளக்கப்படுகின்றன. இவை அனைத்தும் சொல் பற்றிய பொதுச் செய்திகள். இவற்றைத் தொடர்ந்து பெயர்ச் சொல்லின் விளக்கமும் அதன் வகைகளும் விவரிக்கப்படுகின்றன. இறுதியில் எட்டு வேற்றுமைகளும் வேற்றுமை மயக்கமும் விளக்கப்படுகின்றன. நன்னூல் பெயர்களை உயர்திணை, அஃறிணை, பொதுத் திணை என்று எழுவாய் பயனிலை இயைபு பற்றி அமைந்த திணை அடிப்படையிலும் ஆண், பெண், பலர், ஒன்று, பல என்று பால்-எண் அடிப்படையிலும் வகை செய்கின்றது.

முத்துவீரியத்தின் பெயரியல் தொல்காப்பியச் செய்திகளைத் தெளித்த நன்னூல் திட்டத்தின் வெளிப்பாடாக உள்ளது. சொல் பற்றிய விளக்கத்தில் தொல்காப்பியத்தின் (2:158), 'எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே' எனும் நூற்பா முதலிடம் பெறு கின்றது. வேற்றுமைக் கருத்துக்கள் பெயரியலின் இறுதியில் இடம் பெற்றுள்ளன. விளிவேற்றுமை தொல்காப்பியத்தைத் தழுவி விரி வாக விளக்கப்படுகிறது. இயற்சொல் முதலிய செய்யுட் சொற்கள் நான்கும் இங்குக் கூறப்பெறாது, ஒழிபியலில் கூறப்படுகின்றன. இது தொல்காப்பிய நெறி. தொல்காப்பியம் இவற்றை எச்சவிய லில் கூறுகின்றது. உயர்திணை பற்றி விளக்குங்கால் இந்நூல் இருவேறு கருத்துக்களைக் கொண்டுள்ளது. புணரியலில் நன்னூ லைத் தழுவி, 'மக்கள் தேவர் நரகர் உயர்திணை' எனவும் இவ் வியலில் தொல்காப்பியத்தைத் தழுவி, உயர்திணை, என்மனார் மக்கட் சுட்டே' எனவும் கூறிச் செல்கின்றது. தொல்காப்பியம் மக்கட்சுட்டே உயர்திணை என வரையறுத்த போதிலும், தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியையும் (2:4) உயர்தி ணையிற் படுத்துச் சொல்கின்றது. இவற்றை நன்னூல் தொகுத் துரைக்கின்றது. ஆனால் முத்துவீரியம் நன்னூலின் இத்

தொகுப்பு முறையைப் புணரியலில் ஏற்று, பெயரியலில் அதில் நெகிழ்ச்சி கொண்டு, தொல்காப்பியத்தின் ஒரு பகுதிக் கருத்தை மட்டும் எடுத்துரைக்கிறது. இது தொல்காப்பியத்தின் முழுமைக் கோட்பாட்டை இந்நூல் உணரவில்லையோ, அன்றேல் நன்னூலை உடன்படத் தயங்குகின்றதோ என ஐயுற வழி செய்கின்றது.

விளையியல்

இவ்வியற் செய்திகளை நன்னூல் வினைகளின் பொது இலக்கணத்தோடு தொடங்குகிறது. தெரிநிலை வினைச்சொல், குறிப்பு வினைச்சொல் ஆகியவற்றின் விளக்கம் கூறப்படுகிறது. தொடர்ந்து முற்று, பெயரெச்சம், வினையெச்சம் என வினைச் சொற்கள் பகுத்து விளக்கப்படுகின்றன. படர்க்கை வினைமுற்றுக் கள் ஐந்தும், அவற்றைத் தொடர்ந்து இருதிணைகட்கும் உரிய வாகி வரும் பொதுவினைகளும் விளக்கம் பெறுகின்றன.

நன்னூல் தன்மை வினைகளையும் பொதுவினைகளாகக் கருதுகின்றது. மக்கள் மட்டுமே பேச்சாற்றல் உடையவர் என்பது பற்றித் தொல்காப்பியம் தன்மை வினைகளை உயர்திணையின் பாலன என்கிறது. ஆனால் கட்டுக்கதையிலும் கவிதைகளிலும் கற்பனையின் வழி மரம், பறவை, விலங்கு போன்ற அஃறிணைப் பொருட்களும் பேசுவனவாகப் புனைந்துரைக்கப்படுதலை உட் கொண்டு, நன்னூல் தன்மை வினைகளையும் தன்மைப் பெயர் களையும் பொதுத்திணை என இலக்கணம் கூறுகின்றது. தன்மை ஒருமை, தன்மைப் பன்மை என்னும் முறையில் நன்னூல் விளக்கு கிறது. ஆனால் தொல்காப்பியமோ தன்மைப் பன்மையை முன் கூறுகிறது. பிற்காலத்தில் தோன்றிய ஓம் விகுதியையும் நன்னூல் தன்மைப்பன்மையில் சேர்த்துள்ளது. இது தொல்காப்பியத்தில் இல்லை. வியங்கோள் வினை படர்க்கையில் மட்டுமே வரும் எனத் தொல்காப்பியம் (2:228) கூறுகின்றது. இவ்விதிக்கு மாறாகப் பிற் கால இலக்கியங்களில் மூவிடத்தும் வந்தமையால் நன்னூல் இவ் வினையை 'இடம் பாலெங்கும்' வரும் (338) எனக் கூறுகிறது.

தொல்காப்பியம் (2:224) கூறும் 'செய்ம்மன' எனும் பொதுத் திணை வினை வடிவம் பிற்காலத்தில் வழக்கறவே, நன்னூல் 'பழையன கழிதலாக' விடுத்துள்ளது; 'செய்கின்ற' எனும் பிற் கால வடிவம் நன்னூலில் இடம்பெற்றுள்ள 'புதியன புகுதல்'

'செயற்கு' எனும் தொல்காப்பிய வினையெச்சவடிவத்தை 'செயல்' எனும் தொழிற்பெயரும் 'கு' எனும் நான்கன் உருபும் சேர்ந்த கூட்டுவடிவம் என்று கொண்டதால், நன்னூல் அதை விடுத்தது போலும். மேலும் பலவின்பால் விகுதி எனத் தொல்காப்பியம் கூறுவனவாய அ, ஆ, வ என்பவற்றுள் 'வ' என்பது சந்தியில் தோன்றும் வகரவொற்றும் பலவின்பால் விகுதி 'அ' என்பதும் சேர்ந்ததாகும். இதனை உணர்ந்த நன்னூல் (329) அ, ஆ. என் பவற்றை மட்டுமே கூறி, ஆ விகுதி எதிர்மறை வினைகளில் வரும் எனக் கூறுகிறது.

முத்துவீரியம் வினையியலில் மீண்டும் தொல்காப்பியத்தை வழிமொழிகிறது. இதனால் இந்நூல் பிற்கால மொழி வளர்ச்சி யையும் அவ்வளர்ச்சிசியை எடுத்துரைத்த நன்னூல், இலக்கண விளக்கம் போன்ற நூல்களையும் ஏற்க மறுக்கின்றது எனலாம். வினையியற் செய்திகள் தொல்காப்பிய நெறியில் வரிசைப்படுத்தப் படுகின்றன. பொது இலக்கணம், உயர் திணைவினை, குறிப்பு வினை, அஃறிணைவினை, குறிப்புவினை பொதுத்திணை வினை, காலமயக்கம் எனும் முறையில் செய்திகள் இடம் பெற்றுள்ளன. காலமயக்கத்தினை நன்னூல் காலவழு எனக்கொண்டு ஏனைய வழுவமைதிகளைக் கூறும் பொதுவியலில் குறிப்பிடுகிறது.

வினையியலில் முத்துவீரியம் செய்த குறிப்பிடத்தக்க சீர் திருத்தம் தன்மை வினைகளை உயர்திணைக்கு உரியன என்று கூறுவதாகும். இந்நூலில் தன்வினை பன்மை, ஒருமை என்று முறைப்படுத்தப்பட்டுள்ளது. தன்மை பன்மை விகுதி ஓம் என்பதை இந்நூல் விடுத்துள்ளது இவ்விகுதி தொல்காப்பியத்திற்குப் பிந்தைய நூல்களில் இடம் பெற்று இற்றை நாளில் பெருவழக் கில் இருக்கிறது என்பது சுட்டத்தக்கது. முத்துவீரியம் (485) தன்மைப் பெயர்களைப் பொதுப்பெயர்ப்பட்டியலில் சேர்த்து விளக் குகின்றது. எழுவாய் - பயனிலை இயைபு எவ்வாறு அமையும் என்பதை மறந்து இலக்கணம் கூறும் இயல்பு இதில் காணப் படுகிறது.

முத்துவீரியம் (612) அ, ஆ, வ மூன்றையும் பலவின்பால் விகுதிகள் எனக் கூறுகின்றது. இது தொல்காப்பியத்தில் கூறப் படுவதாகும். செய்மன எனும் தொல்காப்பிய வடிவம் இந்நூலி

லும் பொதுத்திணைப் பட்டியலில் இடம்பெறுகின்றது. இவ்வடிவம் பற்றிய சான்று எந்தவொரு இலக்கியத்திலோ பேச்சு வழக்கிலோ இடம்பெறவில்லை. பெயரெச்ச நூற்பாவில் செய்த, செய்கின்ற, செய்யும் எனும் மூன்று வாய்பாடுகளும் கூறப்படுகின்றன. ஆனால் பொதுத்திணைவினைப் பட்டியலில் செய்த, செய்யும் என்பன மட்டுமே இடம்பெறுகின்றன. இம்முரண்பாடு தொல்காப்பிய நூற்பாவைப் படி எடுத்து எழுதும் போக்கினால் ஏற்பட்டதாகும். இதுபோன்ற பிழையினை முத்துவீரியம் வினையெச்சம் பற்றிய செய்திகளிலும் செய்துளது. 'செய்யா' எனும் வாய்பாட்டு வினை இந்நூலில் கூறப்படவில்லை. இது பெருவழக்கில் பயின்று வந்த வொன்று. தொல்காப்பியம் இதனை வினையெச்ச வாய்பாட்டு நூற்பாவில் பட்டியலிடாமல், உயிர்மயங்கியலில் (1:222) சுட்டி யுளது. முத்துவீரியம் வியங்கோள் வினை படர்க்கையில் மட்டுமே வரும் எனக் கூறுகிறது. இதுவும் தொல்காப்பியப்படியே.

பிற இயல்கள்

தொல்காப்பியத்தின் கிளவியாக்கம், எச்சவியற் செய்திகள் நன்னூலில் பொதுவியலில் கூறப்படுகின்றன. இச்செய்திகள் எழுவாய், பயனிலை இயைபு பற்றிய தொடரமைப்புகளையும், அறுவகைத் தொகைத் தொடர்களையும், தொடர்களில் சொற்களை இயைபுப்படுத்திப் பொருள் அறியும் பொருள்கோள்களையும் உள்ளடக்கியவை. எழுவாய், பயனிலை இயைபுச் செய்திகள் தொடருக்கு மிக இன்றியமையாமை பற்றித் தொடருக்குத் தலைமையிடம் கொடுத்து இலக்கணம் கூறும் தொல்காப்பியம் கிளவியாக்கத்தினையும் சொல்லதிகாரத்தின் முதலில் வைத்துளது; எஞ்சிய சொற்களைத் தொகுத்துரைப்பதனால் எச்சவியலை ஈற்றில் வைத்துளது. சொல்லமைப்புக்குத் தலைமையிடம் கொடுக்கும் நன்னூல் இதனை உணராது கிளவியாக்கச் செய்திகளையும் எச்சச் செய்திகளாகக் கொண்டு—பொதுச் செய்தி என்ற நிலையில் பொதுவியலில் கூறுகின்றது. மேலும் பொதுவியற் செய்திகள் நால்வகைச் சொற்களுக்கும் பொது எனக் கருதி நன்னூல் பொதுவியலை வினையியலுக்கும் இடையியலுக்கும் பொதுவில்(நடுவில்) அமைத்துளது.

நன்னூல் இடையியலில் இடைச்சொல்லின் இலக்கணம், அதன் வகைகள், இடைச்சொல் உணர்த்தும் பொருள்கள், ஏ, ஓ, என, என்று, உம், ஒடு, தில், மன், மற்று, மற்றையது, சொல்,

தெய்ய, அந்தில், ஆங்கு, அம்ம, மா, மியா, இக, மோ, மதி, அத்தை, இத்தை, வாழிய, மாள, ஈ, யாழ, யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது, இகும், சின், குரை, ஓரும், போலும், இருந்து, இட்டு, அன்று, தாம், தான், கின்று, நின்று எனும் இடைச்சொற் கள் உணர்த்தும் பொருள் பற்றிய செய்திகள் கூறுகின்றது. தொல் காப்பியம் எழுவகையுள் ஒன்றாகக் கூறிய 'தத்தம் குறிப்பில் பொருள் செய்குவன' என்பதனை நன்னூல் தத்தம் பொருள, குறிப்பு என இரண்டாக்கி, இடைச்சொல் எட்டுவகைப்படும் என்று கூறுகின்றது. தொல்காப்பியம் ஒவ்வொரு சொல்லை இன்னின்ன பொருளில் வரும் என்று ஆங்காங்கே கூறிச் செல்லும் முறை நன்னூலிலும் உளது. எனினும் அப்பொருள்களையெல்லாம் (தோற்றம், அசைநிலை, அச்சம் முதலியன) நன்னூல் தொகுத்து ஒரு நூற்பாவில் கூறுகின்றது.

நன்னூல் உரிச்சொற்களைப் பண்பு உணர்த்தும் அடைகளா கக் கருதி விளக்குகின்றது. இது தொல்காப்பியத்தினின்று பிறழ்ந்த கருத்தாகும். தொல்காப்பியம் உரிச்சொற்களைப் பெயருக்கும் வினைக்கும் அடிப்படையாகக் கொண்டு விளக்கம் தருகின்றது. அந்நூல் உரியியலை வழக்கில் பயின்று வாரா அரிய சொற்களுக் குப் பொருள் கூறும் அகராதியாக அமைத்து, 120 சொற்களுக் குப் பொருள் கூறுகிறது. அடிச்சொற்களே அகராதியில் அமைக் கப்படுவன எனல் குறிக்கத்தக்கது. உரிச்சொற்களை அடைகளாகக் கருதும் நன்னூல், அடைகளின் பண்புகளை விளக்கும் வகை யில் உயிர்ப்பொருட் பண்பு, உயிரல்லாப் பொருட்பண்பு எனப் பகுத்துச் சுட்டுகின்றது. மேலும் இத்தகைய பொருட்களின் பண்புகளைத் தொகுத்துக் கூறுகின்றது. இப்பகுப்பும் பண்புகளும் சமண சமயக் கருத்துக்களாகும். தொல்காப்பியம் அறிவின் அடிப் படையில் உயிரினங்களை அறுவகையாகக் கூற, நன்னூல் ஐவகை யாகச் சுட்டுகின்றது. பகுத்தறிவு (மனம்) என்பது மக்களுக்கு மட்டுமே உரியது என்பது தொல்காப்பியக் கருத்து. அது பிற உயிர்களுக்கும் உரியது என நன்னூல் கருதுவதனால் அந்த ஆறாம் அறிவை விடுத்து, மக்களை ஐயறிவு உயிர்களாகக் கொள் கிறது. இதுவும் சமணத் தாக்கம். தொல்காப்பியம் உயிர்பகுப்புச் செய்திகளை மரபியலில் கூறுகிறது என்பது நினைத்தற்குரித்து.

முத்துவீரியம் பொதுவியல், இடையியல், உரியியல், எனும் மூன்றில் நன்னூல் கூறிய செய்திகளை ஒழிபியலில் கூறுகின்றது.

இந்நூல் இடைச்சொற்களையும் உரிச்சொற்களையும் பெயர், வினைச் சொற்களுக்கு இணையானவையாகக் கருதாமையினால் எஞ்சிய செய்திகளாகக் கொண்டு ஒழிபியலில் கூறுகிறது. இடைச் சொல், உரிச்சொல், இயற்சொல் முதலிய செய்யுட்சொற்கள், கிளவியாக்கக் கருத்துக்கள், எச்சவியற் கருத்துக்கள், ஆகுபெயர் எனும் முறையில் செய்திகள் இங்கு அமைக்கப்பட்டுள்ளன. ஆகு பெயர் தொல்காப்பியத்தில் வேற்றுமை மயங்கியலிலும் நன்னூலில் பெயரிலும் இடம் பெற்றுளது. இவ்வகைப் பெயர்களை ஒருவகைப் பெயர் என்ற நிலையில் நன்னூலும் கருதுகின்றன. முத்துவீரியம் (756) ஆகுபெயருக்கு நன்னூல் தரும் விளக்கத்தை மட்டும் கூறு கின்றது; வகைகளைச் சுட்டவில்லை.

ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதை
அறைகுவ ஆகு பெயரா கும்மே

இடைச்சொல்லின் இலக்கணத்தைத் தொடர்ந்து அதன் வகைகள் முததுவீரியத்தில் கூறப்படுகின்றன. வகை கூறும் நூற் பாவில் 'தத்தம் குறிப்பான் பொருள் செய்குவன' ஒழிந்த ஆறும் சுட்டப்படுகின்றன. ஆனால் குறிப்பால் பொருள் செய்குவன எனும் கருத்து இடைச்சொற்களின் பொருளைச் சொல்வாரியாகக் கூறும் நூற்பாக்களில் இடம் பெற்றுளது. இத்தகு போக்கு இந் நூலில் குறைகளுள் ஒன்று. மன், தில், கொன், உம், ஓ, ஏ, என, என்று, மற்றையது, மற்று, மன்ற, தஞ்சம், அந்தல், கொல், எல், ஆர், குரை, மா, இகும், மியா, இக, மதி, மோ, சின், ஆங்க, அம்மா, போலும், யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ. மாது, ஆக, ஆகல் எனும் இடைச்சொற்கள் பொருள் உணர்த் தப் பெறுகின்றன. இடைச்சொற் பட்டியலில் தொல்காப்பியத் தழுவல் உளது.

தொல்காப்பியத்தின் விளக்கமே உரிச்சொல்லின் பொது இல்க்கணமாக முத்துவீரியத்திலும் உளது. மேலும் இந்நூல் தொல்காப்பியத்தைப் போலவே உரிச்சொல் பற்றிய செய்திகளை அகராதி எனும் நிலையில் அமைந்துள்ளது. உறு, தவ, நனி, புரை, உரு, செல்லல், இன்னல், மல்லல், ஏ, உவப்பு, பசப்பு, இசைப்பு, இயைபு, அலமரல், தெருமரல், மழ, குழ, சீர்த்தி, மாலை, கூர்ப்பு, கழிவு, அதிர்வு, விதிர்ப்பு, தீர்தல், தட, கய, நளி, பிணை, பேண், தா, கம்பலை, சும்மை, இசை, கூற்று, விளம்பு, அறை, பாத்டு, கரை, நொடி, பகர்ச்சி எனும் சொற்கள்

இந்நூலில் பொருள் விளக்கம் பெறுகின்றன. இவற்றுள் தீர்தல், தீர்த்தல், என்பன 'தீர்' எனும் வேரின் அடியாகத் தோன்றியவை. எனவே இலக்கண விளக்கம் இவற்றுள் ஒன்றனை மட்டும் ஏற்றுக் கொண்டது. முத்துவீரியத்தின் உரிச்சொற்கள் பெரும்பான்மையும் தொல்காப்பியச் சொற்களே.

## தொகுப்பு

நன்னூல் மொழி இலக்கணத்தோடு கல்வியியற் கருத்துக் களையும் தருகின்றது. தொல்காப்பியக் கருத்துக்களைப் பெரிதும் ஏற்று, பிற்கால வளர்ச்சியைச் சிறிது சேர்த்துக் கூறுகின்றது.

முத்துவீரியம் அகத்திய நூல்வழி, எளிதில் இலக்கணத்தை விளக்குவதாகச் சுட்டுகின்றது. ஆனால் இரண்டுக்கும் நூலில் சான்று இல்லை. இந்நூல் தொல்காப்பியத்தைப் பெரிதும் வழி மொழிகின்றது. இதனால் பிற்கால மொழி வளர்ச்சியைப் புறக் கணித்தலும் முரண்படக் கூறுதலும் எனும் குற்றத்திற்கு ஆளா கின்றது. சீர்திருத்தம் செய்யப்பெற்ற குறைகளை மீண்டும் குறை நிலைக்குக் கொண்டுவருகின்றது தொல்காப்பியத்தையும் நன்னூ லையும் கற்று, இரண்டின் செதிகளையும் தம் நூலில் புகுத்தும் அவாக் கொண்ட ஆசிரியர் அதனால் முரண்பாடுகளை மேற் கொண்டுள்ளார். இருநூல்களுமே தொல்காப்பியத்தைப் போற்றிய போதினும் அதன் உண்மையான அணுகுமுறையைப் புரிந்து கொள்ளவில்லை. முன் இலக்கண நூல்களைப் படி எடுத்தல் எனும் குறை முத்துவீரியத்தில் மிகுதியாகக் காணப்படுகின்றது.



# மதுரைத் தமிழ்ச்சங்க வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | மதுரைத் தமிழ்ச்சங்க வரலாறு | 12.00 |
| 2. | பன்னூற்றிரட்டு | 5-00 |
| 3. | தமிழ்ச் சொல்லகராதி | 25-00 |
| 4. | மாறனலங்காரம் (பொருளணியியலுரை) | 5-00 |
| 5. | பெருந்தொகை (முதல் 50 பாடல்கள் மூலமும் உரையும்) | 2-00 |
| 6. | குருகைமான்மியம் | 10-00 |
| 7. | டி.சி. ஸ்ரீநிவாசய்யங்கார் நினைவு மலர் | 1-00 |
| 8. | பெருந்தொகை | 15-00 |
| 9. | செந்தமிழ்த் தொகுதி அட்டவணைக் குறிப்பு | 5-00 |
| 10. | செந்தமிழ்த் தொகுப்பு (ஓர் ஆண்டு) | 10-00 |
| 11. | **கோவை, கலம்பக நூல்கள்** | 12-00 |

1. மாறனகப் பொருளும் திருப்பதிக் கோவையும்
2. மதுரை மும்மணிக் கோவை
3. சிராமலைக்கோவை
4. கலசைக் கோவை
5. திருக்கலம்பகம் (மூலமும் உரையும்)
6. திருவருணைக் கலம்பகம்
7. குருமொழி வினாவிடை

| | | |
|---|---|---|
| 12. | **உலா நூல்கள்** | 10-00 |

1. திருவாரூருலா
2. திருச்சிறு புலியூர் உலா
3. விக்கிரம சோழனுலா
4. கடம்பர் கோவில் உலா
5. தேவையுலா
6. புலவராற்றுப்படை

| | | |
|---|---|---|
| 13. | **பாமாலை நூல்கள்** | 12-00 |

1. திருப்பணிமாலை
2. சூடிக்கொடுத்த நாச்சியார் தோத்திரப் பாமாலை (மூலமும் உரையும்)
3. திருக்குற்றாலமாலை
4. திருப்புல்லாணிமாலை
5. திணைமாலை நூற்றைம்பது (மூலமும் உரையும்)
6. கேசவப் பெருமாள் இரட்டைமணிமாலை
7. கலைசைச் சிலேடை வெண்பா
8. திருவாரூர் நான்மணிமாலை (மூலமும் உரையும்)

**14. இலக்கிய நூல்கள்** 12-00

1. முத்தொள்ளாயிரச் செய்யுள்
2. ஐந்திணையைம்பது
3. திருநூற்றந்தாதி (மூலமும் உரையும்)
4. பழமொழி (மூலமும் உரையும்)
5. சங்கர நயினார்கோவில் அந்தாதி
6. திருத்தணிகைத் திருவிருத்தம்
7. நான்மணிக் கடிகை (மூலமும் உரையும்)

**15. இலக்கண நூல்கள்** 5-00

1. அரும்பொருள் விளக்க நிகண்டு
2. பன்னிரு பாட்டியல்
3. அநுமான விளக்கம்

**16. மநிஷா பஞ்சகம்** 6-50

1. மதிஷா பஞ்சகம்
2. ஞானாமிர்தக் கட்டளை
3. அட்டாங்க யோகக் குறள்
4. இராமோதந்தம்

* * *

# செந்தமிழ்

அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் அடங்கிய இவ்விதழ் ஆண்டுக்கு நான்குமுறை வெளியிடப்பெறுவது. ஆண்டுச் சந்தா ரூ 8-00. செந்தமிழைக் கண்ணுறும் தமிழன்பர்கள் சந்தாதாரராகச் சேர்ந்து பிறரையும் சந்தாதாரராகச் சேரத்தூண்டி இதழின் வளர்ச்சிக்கு உதவுமாறு அன்புடன் கேட்டுக் கோள்கிறோம்.

**குறிப்பு :**

1. புத்தகங்கள் வேண்டுவோர் தேவைக்கு எழுதும் பொழுது 25 விழுக்காடு முன் பணம் அனுப்ப வேண்டும். பாக்கித் தொகைக்கு நூல்கள் வி.பி.பி. மூலம் அனுப்பப்படும்.
2. விற்பனையாளர்களுக்கும், நூலகத்திற்கும் 15 விழுக்காடு கழிவு கொடுக்கப்படும்.
3. நூல்கள் அனுப்புவதற்கான செலவுகளை வாங்குபவரே ஏற்க வேண்டும்.

செயலாளர்
மதுரைத் தமிழ்ச் சங்கம்
மதுரை-1.

பரணி அச்சகம் ● மதுரை-1.